





# ஸ்ரீராமாநுஜன் 93

வருடச்சந்தா ரூ. 5



ஆசிரியர் :—P. B. அண்ணங்கராசாரியர், க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.
1956 செப்டம்பர், துன்முகி௵ ஆவணி௴

# ஸ்ரீராமாநுஜன் 93

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.
ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 8 | துன்முகிஸூ ஆவணிமீ 1956ஸூ ஸெப்டம்பர்மீ | மலர் 9 |
|---|---|---|

## இராமாநுச நூற்றந்தாதி

கட்டப்பொருளை மறைப்பொருளென்று * கயவர்சொல்லும்
பெட்டைக்கெடுக்கும்பிரானல்லனே * என்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னுமொள்வாளுருவி
வெட்டிக்களைந்த * இராமானுசனென்னும் மெய்த்தவனே. (93)

## சந்தாசெலுத்தியவர்களின் பெயர்கள்.

192 V. கேசவுலு நாயுடு ஸ்ரீதரன். ஆத்தூர்.
193 T. D. ரங்கராமாநுஜய்யங்கார் திருமாணிக்குழி.
194 வித்வான் ஸீதாராமய்யங்கார், மதுரை.
195 R. ஸௌந்தரராஜன், கண்டாக்டர், R. S. புரம், கோயமுத்தூர்.
196 S. ஸ்ரீனிவாஸய்யங்கார், பரமகுடி.
197 A. கோபாலய்யங்கார், ஆமூர்.
198 ஸ்ரீதர்மேச்வரய்யங்கார், கோயமுத்தூர்
199 A. K. ராஜகோபாலன் ராஜகோட்.
200 S. A. ஸ்ரீநிவாஸய்யங்கார், கர்னம், மல்லாபுரம்.
201 D. ராமலிங்கரெட்டியார், செய்யார்.
202 K. R. சக்ரவர்த்தியாசார்யர், மந்தலோர்.
203 கூரம் வீரவல்லி நரஸிம்மாசாரியர், அம்ருதூர்.
204 K. S. S. ராமாநுஜம், கல்கட்டா.

☙ எங்கள் ஏஜண்டு ஸ்ரீமான் G. ரங்கைய நாயுடு மூலம் சந்தா செலுத்திய சென்னை மெம்பர்களின் பெயர்கள் மார்கழி மாதத்து இதழில் வெளியாகும். பாக்கியுள்ளவர்கள் உடனே செலுத்துக.

சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு:—பழைய வருஷங்களின் சந்தர்பாக்கியும் நிகழும் 56-ம் வருஷத்துச் சந்தா பாக்கியும் செலுத்தவேண்டியவர்கள் பலரிருக்கிறார்கள். அவர்களுக்குத் தபால் எழுதினாலும் பதில் இல்லை. அவர்களின் கௌரவத்தையறிந்து நாம் பத்ரிகையை நிறுத்தாமல் அவர்களுக்கு அனுப்பிவருகிறோம். அந்த கௌரவத்தை அவர்கள் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமல்லவா? கவனிக்கவேணுமென்று மிகவும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

## பத்ராதிபரின் விண்ணப்பம்.

இவ்விதழில் இரண்டு நூல்களைத் தொடங்கியிருக்கிறேன். இதைப்பற்றிச் சிறிது விஜ்ஞாபனம் கேண்மின். அடியேன் திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை எழுதத்தொடங்கின போது, பூர்வாசார்யர்களருளிச்செய்த ஸகல ஸ்தோத்திரங்களுக்கும் மணிப்ரவாள நடையில் வியாக்கியானமெழுதத் தொடங்கினேன். முகுந்தமாலை தொடங்கி நக்ஷத்ரமாலிகையீறாக

ஸகல ஸ்தோத்திரங்களுக்கும் நிச்சேஷமாக விரிவும் தெளிவுமுள்ள வியாக்கியானங்களே யெழுதி வெளியிட்டிருக்கிறேனென்பது அனைவருமறிந்ததேயாகும். வேதாந்த தேசிக ஸ்தோத்திரங்களுக்குமட்டும் உரை பெரும்பாகம் சேஷித்து நிற்கின்றது; இதுகாறும் ஐந்தாறு ஸ்தோத்ரங்களுக்கு மட்டுமே உரை வெளியிடப்பட்டிருக்கின்றது. (மற்ற ஸ்தோத்ரங்களுக்கும் க்ரமேண உரையை வெளியிட்டுப் பூர்த்திசெய்யவேணுமென்னுமவா அதிகரித்திருக்கின்றது. பகவத்பாகவத விசேஷநியமனத்தினால் ஏற்றுக்கொண்டு நடத்திவருகிற பல காரியங்களுக்கிடையே இது முக்கியமாகச்செய்து முடிக்கவேண்டிய கார்யமென்பதை அறிந்திருக்கிறேன். "சேஷாயுஷ்யபி சேஷிதம்பதியாதீக்ஷாமுதீக்ஷாமஹோ" என்று தேசிகனருளிச்செய்தபடி இவ்விஷயத்தில் திவ்ய தம்பதிகளின் திருவருளையே முக்கியமாக நிரீக்ஷித்து நிற்கின்றேன். இடையில் விச்சின்னமாயிருந்த இந்த கைங்கரியம் இவ்விதழில் ஆரம்பமாயிருக்கின்றது. இது இனி இடையறுது தொடர்ந்து நடந்துவருமாக.

இவ்விதழில் இரண்டாவது நூல் கம்பரின்பக் கவித்திரட்டு என்பது. இது, சென்ற கார்த்திகைமாதத்திலேயே அச்சிட ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் "தானே எழுதிய தன் சரிதை"யின் காரணமாக இது வெளிவரத் தடைபட்டிருந்தது. இஃது இப்போது வெளிவரத்தொடக்கமாயிற்று. இனி இதுவும் தொடர்ச்சியாக வெளிவரும். இந்நூலின் முன்னுரையை முக்கியமாக வாசிப்பது.

———o———

## பெரியாரின் பரமபத ப்ராப்தி.

ஸ்ரீவைஷ்ணவவுலகமும் தமிழுலகமும் மிகுந்த சோகக்கடலில் மூழ்க நேர்ந்துவிட்டது. திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபய வே. வைத்தமாநிதி முடும்பை. கோபால க்ருஷ்ணமாசார்யஸ்வாமி, நிகழும் ஆவணித்திங்கள் 11உ ஞாயிற்றுக்கிழமையன்று (26-8-56) மாலை தமது திருமாளிகையில் அநாயாஸமாகத் திருநாட்டுக்கெழுந்தருளினர். இந்த ஸ்வாமி தமது எழுபத்தைந்து திருநக்ஷத்திரங்களுக்கு மேலாகிறது. இரண்டொருமாதமாகவே திருமேனியில் அசக்தியுண்டாகியிருந்தது. ஆனாலும் தம்முடைய பணிகளை நிறுத்தாமலே செய்துவந்தார். திருநாட்டுக்கெழுந்தருளினவன்றும் பகலில் சற்று விச்ராந்தி செய்துகொண்டு பிறகு எழுதுவது திருத்துவது முதலிய வழக்கமான செயல்களைச் செய்துகொண்டேயிருந்து மாலை நாலரைமணிக்குமேல் ஈஸிசேரில் சாய்ந்து கண்வளர்ந்தார். நித்திரை செய்கிறாரென்றே அகத்திலுள்ளவர்கள் நினைத்திருந்தார்கள். ஆறுமணிக்கு வந்துபார்க்க ஆறுத்துயரமாய் விட்டது. "வைகுந்தம் புகுவது மண்ணவர்விதியே."

இந்த ஸ்வாமி உபயபாஷாப்ரவீணரென்று குலாவப்பட்டிருந்தவர். கீர்த்திமூர்த்தியான வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமிக்கு இவர் ஸஹோதரப்ராயராதலால் இளமையில் அவரிடமே கல்வி கற்று அவரோடுகூடவே பழகி உரையெழுதும்பணியில் மிக்க தேர்ச்சி பெற்றார். அந்த ஸ்வாமி தொடங்கியிருந்த பல காரியங்களை மிக மேம்பாடாகப் பூர்த்தி செய்தவர் இந்த ஸ்வாமியே. பள்ளிக்கூடப் பாடங்களுக்கெல்லாம் பல வாண்டுகள் டெக்ஸ்டு நோட்ஸ் வெளியிட்டு வந்ததோடு, கம்பராமாயணம் முதலிய அரிய பெரிய நூல்களுக்கு உரைகளைப் பூர்த்திசெய்து தேசமெங்கும் நிரம்பிய புகழ்பெற்றவர் இந்த மஹான். வெறும் தமிழறிவோடு நில்லாமல் நம் பூர்வாசார்ய க்ரந்தங்களை ஸம்ப்ரதாய பரம்பரையில் கேட்டுணர்ந்த ஞான விளக்கமும் இந்த ஸ்வாமியிடத்தில் அதிசயிக்கத்தக்கதாயிருந்தது. இந்த ஸ்வாமியின் திருவுருவப்படத்தையும் மற்றும் பெருமைகளையும் அடியேனுடைய "தன் சரிதை" யில் பக்கம் 75ல் காண்க.

வேதநூற் பிராயம் நூறுக்குமேனு மெழுந்தருளியிருந்து லோகோபகாரங்களை விசேஷமாகச் செய்து போரவேண்டியவரான இந்த ஸ்வாமியை எம்பெருமான் இப்போதே திருவடி சேர்த்துக்கொண்டது அவனுடைய நிரங்குச ஸ்வாதந்த்ரிய ப்ரயுக்தமேயாகும். இவருடைய அத்விதீயரான திருக்குமாரர் V. M. நரஸிம்ஹம் புருஷ ஸிம்ஹமாக விளங்கிவருகிறார்.

———

ஸ்ரீ:

ஸ்ரீஸீதாலக்ஷ்மணபரதசத்ருக்நஹநுமத்ஸமேத ஸ்ரீராமசந்த்ரபரமாத்மநே நம:

ஸ்ரீகாஞ்சீ ஜகாதாசார்யஸிம்ஹாஸநாதிபதி ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் தொகுத்த

# கம்பரின்பக்கவித்திரட்டு

கம்பராமாயணத்திலுள்ள மிகவினிய பாடல்களின் தொகுதி

தமது அறுபத்தைந்தாமாண்டு நிறைவுக்கு நீடூழி ஞாபகச்சின்னமாய் லோகோபகாரார்த்தமாக அறுபத்தைந்து நூல்களை வெளியிடுவதென்று செய்துகொண்ட ஸமீபகால ஸங்கல்பத்தின்படி வெளியிடப்பட்டுவரும் நூல்களுள் இது

மூன்றாவது

இது கிடைக்குமிடம்:

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

விலை 2 ரூ.

1955

ஸ்ரீ:

## அடியேனுடைய அறுபத்தைந்து நூல்கள்

மன்மத பங்குனி விசாகத்தில் அறுபத்தைந்தாவது பிராயத்தின் பூர்த்தியின் ஞாபகச் சின்னமாக அறுபத்தைந்து நூல்களை வெளியிடுவதென்று ஸமீபகாலத்தில் ஒரு ஸங்கல்பம் செய்துகொண்டேன். உண்மையில் இது மஹத்தான ஸாஹஸம். ஆயினும், ஸத்ய ஸங்கல்பனான எம்பெருமானுடைய ஸங்கல்பத்தை யநுஸரித்தே அடியேன் ஸங்கல்பித்திருப்பதனால் இது அநாயாஸமாக நிறைவேறுமென்று துணிந்திருக்கிறேன். அடியேன் எது மநோரதித்தாலும் அதைப் பேரருளாளனும பெருந்தேவித்தாயாரும் முன்னின்று நிறைவேற்றி வருவதனால் இதில் கவலையற்றிருக்கிறேன். இந்த 65 நூல்கள் ஒரே பாஷையிலல்ல; வடமொழி, தென்மொழி, தெலுங்கு, ஹிந்தியாகிய நான்கு பாஷைகளிலுமாகும். பூருவர்கள் பணித்த நூல்களைப் பரிஷ்கரித்துப் பதிப்பிப்பதும் இதில் ஏகதேசம் சேரும். அப்படி ஐந்து நூல்கள் தேறக்கூடும். மற்ற அறுபது நூல்கள் புதிதாக இயற்றப்படுமவையாம். இவை எத்தனை வருஷங்களில் முடிவுபெறுமென்பதை எம்பெருமான் திருவுள்ளமே யறியும்.

—அறுபத்தைந்து நூல்களில் தற்காலம் உத்தேசத்திலுள்ளவை—

1. பகவத்ராமாநுஜக்ரந்தமாலா (நாகரி)
2. நாலாயிர திவ்யப்ரபந்த மூலம்
3. கம்பரின்பக்கவித்திரட்டு
4. அங்கண்மாஞாலத்தமுது
5. அருளிச்செயலாராய்ச்சி
6. பகவத்கீதையுரை
7. ஸ்ரீபாஷ்யஸர்வஸ்வம்
8. ஸ்ரீராமாயண ஸர்வஸ்வம்
9. ஸ்ரீவிஷ்ணுபுராண ஸர்வஸ்வம்
10. வேதாந்ததர்சநஸாரம்
11. வேதவிமர்சம்
12. வைதிகவிலோசனம்
13. தேசிக ஸூக்திரஸாஸ்வாதம்
14. அர்ச்சாவதார மஹிமை
15. அருளாளனருள் விளக்கு
16. ஸதர்த்த ஸித்தாஞ்ஜநம்
17. ஸந்மார்க்க ஸம்ரக்ஷணம்
18. ஸத்புருஷஸஞ்ஜீவிநி
19. நித்யாநுஷ்டாநபத்ததி
20. தென்மொழி வடமொழியகராதி
21. நம்பிள்ளை தந்த நல்லமுது
22. மஹாசார்ய ஸூக்தி மாதுர்யம்
23. உபநிஷத் ஸர்வஸ்வம்
24. தானேயெழுதிய தன் சரிதை

ஆகிய இந்த நூல்களை விரைவில் வெளியிட வேணுமென்று குதூஹலமுள்ளது. இவற்றுள் சில நூல்கள் இதர பாஷைகளிலும் மொழிபெயர்த்து வெளியிடப்படும். பகவத்பாகவத க்ருபாகடாக்ஷ விசேஷத்தினால் இந்த மநோரதம் இடையூறின்றி நிறைவேறுமென்று நம்பியிருக்கிறேன்.

இங்ஙனம், ஸ்ரீவைஷ்ணவதாஸன்

**காஞ்சீ ப்ர. அண்ணங்கராசாரியன்,**

ஸ்ரீ:

## முன்னுரை

அருட்கடலான திருமால் * உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்த பிறவிகளிலே ஸ்ரீராமாவதாரமும் க்ருஷ்ணாவதாரமும் மிகச் சிறந்தவை. ஸ்ரீராமாவதார சரிதையைப் பற்றி ஸ்ரீமத் வால்மீகி ராமாயணமும், ஸ்ரீக்ருஷ்ணாவதாரசரிதையைப்பற்றி ஸ்ரீ பாகவதம் முதலியனவும் வடமொழியில் தோன்றியுள்ளன. நாஸ்திகம் தலையெடுத்தாடு மிக்காலத்திலும் ஆங்காங்கு பகவத்கதைகளைக் கேட்க விருப்ப முடையார் மலிந்துள்ளார்களென்பது யாவர்க்கும் கட்கூடு. பக்தர்களுக்கு ஸ்ரீராம கதையைக் கேட்பதிலுள்ள குதூஹலம் வேறு எதிலுமில்லை யென்பதும் எங்குங் கண்ட தொன்றும். வட இந்தியாவில் ஸ்ரீபாகவதத்திற்கும், தென்னிந்தியாவில் ஸ்ரீராமாயணத்திற்கும் மிக்க ஏற்றம் காணப்பட்டு வருகின்றது.

ஸ்ரீராமகதையைச் சொல்லத் தோன்றிய இதிஹாஸ புராணங்கள் பல இருந்தாலும் அவற்றுள் வான்மீகி ராமாயண மொன்றுக்கே மிக்க சிறப்பு யாவருமிசைந்தது. இந்த ஸ்ரீராமாயணத்தை சுலோகங்களின்மேல் பொருள்கேட்டு மகிழ்வார் சிலர். வல்லார்களைக்கொண்டு உபந்யாஸங்கள் செய்யச் சொல்லிக் கேட்டுக் களிப்பார் பலர். இக்காலத்தில் இத்தகைய உபந்யாஸ பத்ததியே எங்கும் அதிகரித்து வருகின்றது. இளமையிலேயே வடமொழி தென்மொழிகளை நன்கு பயின்றவர்கள் வெறும் ராமாயணத்தோடு நில்லாமல் ஸம்ஸ்க்ருத காவ்ய நாடகாதிகளிலிருந்து பல சுலோகங்களையும், கம்ப ராமாயணத்திலிருந்து பல பாடல்களையும் இடையிடையே எடுத்துரைத்து ச்ரோதாக்களை மிகவும் ரஸிப்பிக்கிறார்கள். உபந்யாஸங்களுக்குக் கம்ப ராமாயணம் இன்றியமையாததாயிருக்கின்றது. கம்ப ராமாயணப் பாடல்களை விசேஷமாக எடுத்துரைத்தாலன்றி இன்ப முண்டாவதில்லை. உபந்யாஸங்களுக்காக அப்பாடல்களைப் புதிதாகப் பாடம் செய்ய விரும்புவார் இக்காலத்தில் பலருளர். அவர்கள் மிகவும் சிரமப்படுகிறார்கள். கஷ்டப்பட்டு அவர்கள் கம்பராமாயணப் புத்தகத்தைச் சம்பாதித்துக் கொண்டாலும், இன்பமான பாடல்கள் எங்கிருக்கின்றனவென்று அறியப்பெறாமல் வருந்தி நிற்கிறார்கள். அன்னவர்களுக்குப் பேருதவிபுரியவேணுமென்னுமாசை தோன்றி "கம்பரின்பக்கவித்திரட்டு" என்னுமிந்நூலைச் சித்தப்படுத்தினேன். காண்டவரிசையாகவும் படலவரிசையாகவும் முக்கியமான பாடல்களைத் திரட்டி, பதவுரையோடும் கருத்துரையோடும் வெளியிடுகின்றேன். முக்கியமான பாடல்கள் யாவும் இதில் தொகுக்கப்பட்டு விட்டனவென்று சொல்ல இயலாது. ஆயிரஞ் செய்யுட்களையாவது திரட்டினால்தான் அங்ஙனஞ் சொல்ல இயலும். உபந்யாஸகர்கள் கண்டபாடஞ் செய்து கொள்வதற்காகவே தொகுக்கப்பட்ட இந்நூலில் அவ்வளவு பாடல்களைச் சேர்த்தால் பயன்படாதென்று கருதியே உசிதமான முறையில் பாடல்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மறுபதிப்புச் செய்ய நேரும்போது மேலும் சில பாடல்களைச் சேர்க்க விருப்பமுண்டு.

இங்ஙனம்:

**ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்**

**அண்ணங்கராசாரியர்.**

ஸ்ரீ
ஸ்ரீ ராமபிரான் திருவடிகளே சரணம்

# கம்பரின்பக்கவித்திரட்டு

[ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராசாரியர்]

— கம்பராமாயணம் - பாலகாண்டம் - காப்பு —

(நம்மாழ்வாரைப் பற்றிய தோத்திரம்)

1. தருகைநீண்ட தயரதன்தான் தரும், இருகைவேழத் திராகவன்தன் கதை
திரிகைவேலைத் தரைமிசைச் செப்பிடக், குருகைநாதன் குரைகழல் காப்பதே.

| | | | |
|---|---|---|---|
| தருகை நீண்ட | வள்ளல்தனம் மிகும் திருக் கப்பெற்ற | திரிகை வேலை | வட்டவடிவமான கடலால் சூழப்பட்ட |
| தயரதன் தான் தரும் | தசரத மன்னவனால் பெறப் பட்ட | தரை மிசை செப்பிட காப்பது | இம்மண்ணுலகிலே வெளியிடுவதற்கு ரக்ஷையாகவிருப்பது |
| இரு கை வேழத்து இராகவன் தன் | இரண்டு துதிக்கைகளை யுடைய யானேபோ லென் னும்படியான இராமபிரா னுடைய | குருகை நாதன் | திருக்குருகூரி லவதரித்த நம் மாழ்வாருடைய |
| | | குரை கழல் | (வீரக்கழலணிந்ததனால்) ஒலிக்கின்ற திருவடிகளே யாம். |
| கதை | சரிதையை, | | |

*தயரதற்கு மகன்றன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே* என்றும் *கற்பாரிராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ* என்று முள்ள திருவாய்மொழிப் பாசுரங்கள் பலவற்றால் ஸ்ரீராம பக்தியில் தலைசிறந்தவரென்று பிரசித்திபெற்ற நம்மாழ்வாருடைய திருவடிகளைச் சிந்தனை செய்தாலன்றித் தமது நூல் இடையூறின்றித் தலைக்கட்டாதென்று துணிந்த கம்பர் முதலிலே நம்மாழ்வாரைத் துதி செய்த விது மிகப் பொருத்தமானது. தசரத சக்கரவர்த்தியின் ஔதார்யம் பல வழிகளில் பிரசித்தி பெற்றிருந்தாலும் இராம பிரானைப் பெற்றுக் கொடுத்ததே தலையான ஔதார்யமென்று கருதினர் கம்பர். ... ... ... *

(அனுமானைப்பற்றிய தோத்திரம்.)

2. அஞ்சிலே யொன்று பெற்றான் அஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றுருக ஆரியற்காக வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற அணங்குகண் டயலாரூரில்
அஞ்சிலே யொன்றைவைத்தா னவனெம்மை யளித்துக்காப்பான்.

| | | | |
|---|---|---|---|
| அஞ்சிலே ஒன்று பெற்றான் | (நிலம் நீர் தீ கால் விசும்பு எனப்படுகிற) பஞ்சபூதங்களுள் ஒன்றாகிய வாயுவின் குமாரனாகி, | அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கு கண்டு | (முன் சொன்ன) பஞ்சபூதங்களுள் ஒன்றான பூமியால் பெறப்பட்ட தெய்வமகளான சீதையைக் கண்டு (பிறகு) |
| அஞ்சிலே ஒன்று ஆறு ஆக | (முன் சொன்ன) பஞ்சபூதங்களுள் ஒன்றான ஆகாயமே வழியாக, | அயலார் ஊரில் | பகைவர்களினூராகிய இலங்காபுரியிலே |
| அஞ்சிலே ஒன்றை தாவி | (முன் சொன்ன) பஞ்சபூதங்களுள் ஒன்றான ஜலதத்துவமாகிய கடலைக் கடந்து | அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவன் | (முன் சொன்ன) பஞ்சபூதங்களுள் ஒன்றான நெருப்பை வைத்து அவ்வூரை முழுதும் வேவித்தவனான அவ்வனுமான் |
| ஆரியற்கு ஆக ஏகி | இராமபிரானது நியமனத்தினால் (இலங்கைக்குச்) சென்று | எம்மை அளித்து காப்பான் | நம்மை அருள் செய்து காத்தருள்வன். |

*** பரமபதத்திற்குச் செல்லாமல் இம்மண்ணுலகிலேயே சிரஞ்சீவியாயிருந்து ஸ்ரீராமாயண ப்ரவசனம் நடைபெறு மிடங்கள் தோறும் சிரமேற்கரங்



குவித்துக் கண்ணுங் கண்ணீருமாயிருந்து ஸ்ரீராமாயண ச்ரவணம் பண்ணுவதையே விரதமாகக் கொண்ட திருவடியைத் துதிப்பது, தாமியற்றும் நூல் இடையூறின்றி முற்றுப் பெறுதற்கு உறுப்பாமென்று அறுதியிட்டு இயற்றிய பாடல் இது. ஹனுமானுக்குத் தனியதை வழங்கும் வடமொழி சுலோகங்களுள் ஒன்றான "உல்லங்க்ய ஸிந்தோஸ் ஸலிலம் ஸலீலம் யச் சோகவஹ்நிம் ஜநகாத்மஜாயா:, ஆதாய தேநைவ ததாஹ லங்காம் நமாமி தம் ப்ராஞ்ஜலி ராஞ்ஜநேயம்" என்கிற சுலோகத்தையே நெஞ்சிற் கொண்டு இயற்றிய பாடலிதுவென்று கொள்க. இராமபிரானது கட்டளையினால் ஆகாச மார்க்கமாகக் கடலைக்கடந்து இலங்கை சென்று சேர்ந்து அங்கு ஸீதாபிராட்டியைக் கண்டு செய்தியை யறிவித்து முதுமதிளிலங்கையை வேவித்துவந்த அனுமன் நம்மைக் காத்தருள வேணு மென்றதாயிற்று. 'அயலாரூரில்" என்றது மத்திமதீபமாய் முன்னும் பின்னுமியையும்; அணங்கைக் கண்டதும் அயலாரூரில்; நெருப்புவைத்ததும் அயலாரூரில். "ஆருயிர்க்காகவேகி" என்றும், "ஆருயிர் காக்கவேகி" என்றும் பாடம்.

பஞ்ச பூதங்களைப் பெயர் குறித்துக் கூறுமல் 'அஞ்சு' என்று பொதுப்படக் கூறியிருப்பது ஸம்ப்ரதாயார்த்த விசேஷ மொன்றையுங் காட்டுதற்கென்க. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "அத்யத்வே ஹநுமத்ஸமேந குருணு" என்று பணித்தபடி திருவடி ஆசார்யஸ்தானத்திலே நிற்பவராதலால் ஸம்ப்ரதாய ஸித்தமான ஆசார்ய லக்ஷண சிஷ்ய லக்ஷணங்களும் இதில் தெரிவிக்கப்பட்டனவாகின்றன. எங்ஙனே யென்னில்; அஞ்சிலே யொன்று பெற்று னென்றது - * தாப: புண்ட்ரஸ் ததா நாம மந்த்ரோ யாகச் ச பஞ்சம:, அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்ய ஹேதவ:* என்கிறபடியே பரமைகாந்தித்வஹேதுவாகச் சொல்லப்படுகிற பஞ்சஸம்ஸ்காரங்களுள் ஒன்றான திருமந்திரத்தினால் பெறப்பட்டவன் ஆசாரியன். ஆசார்ய ஹ்ருதயத்தில் "தாயினுமாயின செய்யுமத்தாலும் பிறப்பிக்கு மது....ச்ரேஷ்டஜன்மம்" என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம்.

அஞ்சிலே ஒன்று ஆறுக—கர்மம் ஜ்ஞானம் பக்தி ப்ரபத்தி ஆசார்யாபிமானம் ஆகிற ஐந்து உபாயங்களுள் ஒன்றான ஆசார்யாபிமானத்தையே பற்றுக் கோடாகக் கொண்டு என்றபடி. அஞ்சிலே ஒன்றைத் தாவி—*ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம்* இத்யாதிச்லோகத்திற் சொல்லப்படுகிற [அல்லது, *மிக்கவிறை நிலையும் மெய்யாமுயிர்நிலையும்......* என்கிற திருவாய்மொழித் தனியனிற் சொல்லப்படுகிற] அர்த்த பஞ்சகத்தில் விரோதி ஸ்வரூபமும் ஒன்றாகையாலே அந்த விரோதியைக் கடந்து என்றபடி. ஆருயிர் காக்க ஏகி—சேதனஸம்ரக்ஷணார்த்தமாக இந்நிலத்தே வந்தவதரித்து என்றபடி. அஞ்சிலே யொன்று பெற்ற அணங்கு கண்டு—பரவ்யூஹ விபவாந்தர்யாமி அர்ச்சாவதாரங்களுள் ஒன்றான அர்ச்சாவதாரத்தையே தனக்குப் புகலாகப் பெற்றிருக்கிற சிஷ்யனைக் கடாக்ஷித்து என்றபடி. அயலாரூரிலஞ்சிலே ஒன்றை வைத்தான்—(இப்பொருளில் அயலார் என்பது விவக்ஷிதமன்று). ஐந்து ஊர்களிலே ஓர் ஊரைப் புகலாக வைத்தவன்; இம் மண்ணுலகம், நரகம், ஸ்வர்க்கம், கைவல்யம், பரமபதம் ஆகிய ஐந்து இடங்களுக்குள்ளே ஓரிடமாகிய வைகுண்டத்தைமட்டும் புகலிடமாக்கி வைத்தவன் ஆசார்யன். இத்தகைய மற்றும்பல விசேஷப் பொருளை நோக்கியே இச்செய்யுள் விசித்திரமாக அமைக்கப்பட்டதென்க. ... ... ... ... ... ...*

(கம்பராமாயணம் பேரின்பவெள்ளம் தருமென்பதுபற்றி.)

3. இம்பர்நாட்டிற் செல்வமெலாம் எய்தியரசாண் டிருந்தாலும்
உம்பர்நாட்டிற் கற்பகக்கா வோங்குநிழலி லிருந்தாலும்
செம்பொன்மேரு வனையபுயத் திறல்சேரிராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற்போல் கற்றோர்க்கிதயங் களியாதே.

| | | | |
|---|---|---|---|
| இம்பர் நாட்டில் செல்வம் எலாம் எய்தி | இஹலோகத்து ஐச்வரியங்களையெல்லாமடைந்து | செம் பொன் மேரு அனைய புயம் திறல் சேர் | செவ்விய பொன்மயமாகிய மேருகிரியோடொத்த புஜபலத்தை யுடையனை |
| அரசு ஆண்டு இருந்தாலும் | ஸாம்ராஜ்யம் செலுத்தினாலும்; | இராமன் | சக்ரவர்த்தி திருமகனுடைய |
| | | திருக்கதையில் | திவ்ய கதையை வருணிக்கின்ற நூல்களுள் |
| உம்பர் நாட்டில் | விண்ணுலகில் | கம்பநாடன் கவிதையில் போல் | கம்பருடைய கவிதையான இப்பாடல்களிற்போல |
| ஓங்கு கற்பகம் கா நிழலில் இருந்தாலும் | உயர்ந்து வளர்ந்த கல்பவிருக்ஷச்சாயையிலே வஸிக்கப் பெற்றாலும், | கற்றோர்க்கு இதயம் களியாது | கல்வி பயின்றவர்களது மனமானது களிப்படையாது. |

* * *—இஹலோகச் செல்வங்களை யெல்லா மனுபவித்து அடையுமானந்தமும், விண்ணுலகச் செல்வங்களை யெல்லா மனுபவித்து அடையுமானந்தமும், கம்பராமாயணப் பாடல்களை யனுபவித்து அடையுமானந்தத்திற்கு ஈடாகாதென்றவாறு. ... ... ... ... ... ... *

(வான்மீகி ராமாயணத்தையே முதனூலாகக் கொண்டது கம்பராமாயணமெனல்)

4. நாரணன் விளையாட்டெல்லாம் நாரதமுனிவன் கூற
ஆரணக் கவிதைசெய்தான் அறிந்தவான்மீகி யென்பான்
சீரணி சோழநாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோன்
காரணக்கொடையான் கம்பன் தமிழினுற் கவிசெய்தானே.

| | | | |
|---|---|---|---|
| நாரணன் விளையாட்டு எல்லாம் நாரத முனிவன் கூற | நாராயணனுடைய அபராவதாரமான இராமபிரானது லீலையான சரித்திரங்களையெல்லாம் நாரதமஹர்ஷி உபதேசிக்க, | | (அந்த வால்மீகி ராமாயணத்தை யடியொற்றி) |
| | | சீர் அணி சோழ நாடு திருவழுந்தூருள் வாழ்வோன் | சீரிய சோழநாட்டிலுள்ள திருவழுந்தூரில் வாழ்பவனும் |
| அறிந்த வான்மீகி என்பான் | கேட்டறிந்த வான்மீகி முனிவன் | கார் அண் அகொடையான் கம்பன் | மேகத்தையொத்த வள்ளல் தனமுடையனுமான கம்பன் |
| ஆரணம் கவிதை செய்தான் | வேதத்தின் ப்ராதுர்ப்பாவமென்னும்படியான ச்லோகமாலிகைகளை இயற்றினன்; | தமிழினால் கவி செய்தான் | தமிழ்ச் செய்யுளாகச் செய்து வைத்தான். |

* * *—*ஸஹி தேவை ருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:* என்று வான்மீகி முனிவர் தாமே கூறிவைத்தபடி ஸ்ரீமந்நாராயணனே ஸ்ரீராமனைத் திருவவதரித்தருளினனென்னும் தத்துவத்தைக் காட்டுதற்கு 'நாரணன்' என்றார். அவாப்த ஸமஸ்த காமனை பகவான் அவதரித்துப் பெறவேண்டிய பேறு ஒன்றுமில்லை யாயினும் லீலாமாநுஷ விக்ரஹனையவதரித்து லீலைகளையே செய்தானென்றும், கரதூஷணதிவதம் ராவணவதம் முதலியவற்றையும் அவலீலையாகவே செய்தானென்றுங் காட்டுதற்கு "விளையாட்டெல்லாம்" என்றார். *தபஸ் ஸ்வாத்யாய நிரதம் தபஸ்வீ வாக்விதாம் வரம், நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநி புங்கவம்* என்று தொடங்கியுள்ள ஸ்ரீராமாயண உபக்ரமத்தை நோக்கி 'நாரத முனிவன் கூற' என்றார். "வேத வேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸா தாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா" என்கிற ஸ்ரீராமாயணத்தனியனில் நோக்காக "ஆரணக்கவிதை செய்தான்" என்றார். வேதத்தில் ஒரு பகுதியாகிய ஆரண்யகத்தை யுணர்த்தும் ஆரணமென்ற சொல் பொதுவாக வேதத்தையும் குறிக்கும். ... *



(கம்பராமாயணம் மானிட வுலகுக்கு அமிருதம் போன்றதென்பது.)

5. அம்பிலே சிலையைநாட்டி அமரர்க்கன் றமுதமீந்த
தம்பிரானென்னத் தானும் தமிழிலே தாலைநாட்டிக்
கம்பநாடுடைய வள்ளல் கவிச்சக்ரவர்த்தி பார்மேல்
நம்பு பாமாலையாலே நரருக்கின் றமுதமீந்தான்.

| | | | |
|---|---|---|---|
| அன்று | தேவர்கள் வந்து வேண்டின அக்காலத்தில் | இன்று | இந்நாளில் |
| அம்பிலே சிலையை நாட்டி | அம்புதியிலே (மந்தர மெனும்) மலையை மத்தாக நாட்டி [திருப்பாற் கடலைக் கடைந்து] | தமிழில் தாலை நாட்டி | தமிழ்க்கடலில் தனது நாவாகிய மந்தரமலையை நாட்டி (க்கடைந்து) |
| அமரர்க்கு அமுதம் ஈந்த தம்பிரான் என்ன | தேவர்களுக்கு அமிருதத்தையெடுத்துத் தந்தருளின திருமாலைப் போலவே | நம்பு பாமாலையாலே | விரும்பத்தக்க பாசுரத் தொகுதியினால் |
| கவிசக்ரவர்த்தி கம்ப நாடு உடைய வள்ளல் தானும் | கவிச்ரேஷ்டனும் வள்ளலுமாகிய கம்பன் | பார் மேல் நரருக்கு அமுதம் ஈந்தான் | இம்மண்ணுலகின்கண் மனிதர்களுக்கு (ஸ்ரீராம கதையாகிற) அம்ருதத்தை அருந்தக்கொடுத்தான். |

* * *—"தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகள் சொன்னேன்" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் சாயையிலே அமைந்தது இது. அந்த நம்மாழ்வார் விஷயமாகப் பிள்ளைப் பெருமாளையங்கார் பணித்ததான "மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து, துறைப்பாற் படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமுதம், கறைப் பாம்பணைப் பள்ளியா னன்பரீட்டம் களித்தருந்த நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே" என்ற பாசுரத்தையும் இங்கு நினைப்பது. திருமாலருளால் தேவர்களுக்கு அமுதங் கிடைத்தது பரோக்ஷம்; மனிதர்களான நமக்கு அமுதம் கிடைத்திருப்பது ப்ரத்யக்ஷமென்க. அம்புதியை அம்பு என்றது இலக்கணை. கல்லுக்கு வாசகமான சிலா என்னும் வடசொல் இங்குச் சிலையென்றுள்ளது; இதுவும் இலக்கணையால் மலையையுணர்த்திற்று. தால் - நாவு. .... .... .... .... .... .... *

(ஸ்ரீ ராம நாமப்ரபாவம் கூறுதல்)

6. நன்மையுஞ் செல்வமும் நாளும்நல்குமே, தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித்தீருமே, இம்மையே ராமவென் றிரண்டெழுத்தினால்.

| | | | |
|---|---|---|---|
| ராம என்ற இரண்டு எழுத்தினால் | இரண்டே யெழுத்தான ராம நாமத்தைச் சொல்லுவதனால் | தின்மையும் பாவமும் சிதைந்து தேயும் | ஸஞ்சிதம் ப்ராரப்தம் என்கிற ஸகல பாபங்களும் அழிந்தொழியும்; |
| இம்மையே நாளும் | இப்பிறப்பு தன்னிலே எப்போதும் | | |
| நன்மையும் செல்வமும் நல்கும்; | எல்லா நன்மைகளும் எல்லாச் செல்வங்களும் நிறைந்திடும்; | சென்மமும் மரணமும் இன்றி தீரும் | பிறப்பது மிறப்பதுமாகிற ஸம்ஸாரமும் தொலையும். |

* * *—முதலடியில் 'நல்குமே' என்கிற பாடமுமுள்ளது; அப்போது 'இராமன்' என எழுவாய் வருவித்துக் கொள்ளவேணும். .... .... *

(ஸ்ரீ ராமாயண ச்ரவணத்தின் பயனுரைத்தல்)

7. வடகலை தென்கலை வடுகுகன்னடம், இடமுளபாடை யாதொன்றினுயினும்
திடமுள ரகுகுலத் திராமன்தன்கதை, அடைவுடன் கேட்பவ ரமரராவரே.

| | | | |
|---|---|---|---|
| திடம் உள ரகு குலத்து இராமன் தன் கதை | விக்ரமசாலியான ஸ்ரீராகவனுடைய திவ்ய சரிதையை | இடம் உள பாடை யாது ஒன்றின் ஆயினும் | இவ்வுலகில் நடையாடுகின்ற பாஷை எதனுலாயினும் |
| வடகலை தென்கலை வடுகு கன்னடம் | வடமொழி தென்மொழி தெலுங்கு கன்னடம் முதலாக | அடைவுடன் கேட்பவர் | பக்தி ச்ரத்தையோடு ச்ரவணம் செய்பவர்கள் |
| | | அமரர் ஆவர் | நித்ய முக்தர்களோடொப்பர். |

* * *—ஆர்ய பாஷையாகிய ஸம்ஸ்க்ருத பாஷைக்குத்தான் சிறப்புள்ளதென்றும், அப்பாஷையிலமைந்த வான்மீகி ராமாயணத்தை யோதுவதும் கேட்பதுமே பொருந்துமென்றும், தமிழ்ப் பாஷையினுலியற்றப்படுகிற இந்த ராமாயணம் எதற்கென்றும் சிலர் கருதக்கூடுமென்றெண்ணி இச் செய்யுள் அமைக்கப்பட்டதென்க. எவ்வகையினும் ராமகதைக்கு ஏற்றமே யொழிய, பாஷையில் ஏற்றத் தாழ்வு கிடையாதென்றதாயிற்று. "பேச்சுப் பார்க்கில் கள்ளப்பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்" என்ற ஆசார்யஹ்ருதய ஸூக்தியும் அவ்விடத்து வியாக்கியானமும் இங்கே காணத்தக்கன. 'திடமுள' என்ற அடைமொழி ரகுகுலத்திற்குமாகும், ராமனுக்குமாகும், கதைக்குமாகும். ... ... ... *

8. வென்றிசே ரிலங்கையானை வென்ற மால்வீரமோத
நின்ற ராமாயணத்தில் நிகழ்ந்திடு கதைகள் தம்மில்
ஒன்றினைப் படித்தோர்தாமும் உரைத்திடக் கேட்டோர்தாமும்
நன்றிது வென்றோர்தாமும் நரகம தெய்திடாரே.

| | | | |
|---|---|---|---|
| வென்றி சேர் இலங்கையானை வென்ற | (முன்னே) வெற்றிகளையடைந்திருந்த இராவணனை வென்றொழித்த | படித்தோர் தாமும் | தாமாகப்படித்தவர்களும் |
| மால் | திருமாலான இராமபிரானுடைய | உரைத்திட கேட்டோர் தாமும் | ஒருவர் எடுத்துரைக்கக் கேட்டவர்களும் |
| வீரம் ஓதநின்ற | வீரச்செயல்களை ஓதுவதற்கு அமைந்த | இது நன்று என்றோர் தாமும் | (பாராயணமோ ச்வரணமோ செய்யாமற் போனுலும்) 'ராமாயணகதை சிறந்தது' என்று கொண்டாடுமவர்களும் |
| ராமாயணத்தில் | ஸ்ரீராமாயண மஹாகாவியத்தில் | | |
| நிகழ்ந்திடு கதைகள் தம்மில் ஒன்றினை | உலாவுகின்ற கதைகளுக்குள்ளே ஏதேனுமொரு கதையை | நரகம் அது எய்திடார் | நரகம் செல்லப்பெருர்கள். |

* * *—ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்பவர்களுக்கும் ஸ்ரீராமகதையைக் கேட்பவர்களுக்கும் கிடைக்கக் கூடிய பலன், அவ்விரண்டிலும் அந்வயமின்றிக்கே உதாஸீநர்களாயிருந்து அபிநந்தனம் மட்டும் செய்பவர்களுக்கும் கிடைக்குமென்றவிது அதிவாதமன்று; உண்மையுரையே. ... ... ... *

9. அன்னதான மகிலநற்றுனங்கள், கன்னிதானம் கபிலைநற்றுனமே
சொன்னதானப் பயனெனச் சொல்லுவர், மன்னிராமகதை மறவார்க்கரோ.

(கருத்து)—நீடுகின்ற நிறைபுகழுடைய ஸ்ரீ ராம கதையை மறந்திடாமல் நிச்சலும் ஓதிவருமவர்களுக்கு அன்னதானம் பூமிதானம் கன்னிகாதானம், கோதானம் என்றிப்படி (நூல்களிற்) கூறப்பட்டுள்ள பலவகைத் தானங்களினுடையவும் பலன் சித்திக்குமென்று மஹான்கள் கூறுவர்களென்றவாறு. சொன்னதானம்—ஸ்வர்ணதான மென்றுமாம். ... ... ... ... *



(அவையடக்கம்.)

10. முத்தமிழ்த் துறையின் முறைபோகிய, உத்தமக்கவிஞர்க் கொன்றுணர்த்துவன்
பித்தர்சொன்னவும் பேதையர்சொன்னவும், பத்தர்சொன்னவும் பன்னப்பெறுபவோ. 8

(கருத்து)—இயல்தமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் மூவகைத் தமிழ்த் துறைகளிலும் நன்கு தேர்ச்சி பெற்ற உயர்ந்த வித்துவான்களுக்கு ஈதொன்று சொல்லுகின்றேன். உலகில் பித்துக்கொள்ளிகள் சொல்லுமவையும் சிறுபிள்ளைகள் சொல்லுமவையும் பக்திமான்கள் சொல்லுமவையும் ஆராயத் தகுந்தவையல்லவன்றே. என்னைப் பித்தர் வகுப்பிற் சேர்த்துக் கொண்டாலும் சரி, பேதையர் திரளில் கூட்டிக் கொண்டாலும் சரி, பக்திமான்களிலே இவனுமொருவன் என்று கொண்டாலும் சரி, பிழையாராயாதிருக்கத்தகும் - என்றவாறு.*

(நூல்வரலாறு கூறுதல்.)

11. தேவபாடையி னிக்கதை செய்தவர், மூவரானவர்தம்முளு முந்திய
நாவினுருரையின்படி நான்தமிழ்ப், பாவினுலிதுணர்த்திய பண்பரோ. 10

(கருத்து)—நான் தமிழ்ப் பாவினுல் இவ்விராமாயணம் பாடியதானது வான்மீகி ராமாயணத்தைப் பெரும்பாலுந் தழுவியே; ஸம்ஸ்க்ருத பாஷையில் ராமாயணமியற்றிய மஹரிஷிகள் மூவர்; வால்மீகியும் வஸிஷ்டரும் போதாயநரும். அவர்களுள் எல்லாவகையினும் மேம்பட்டவர் வான்மீகியாவர். அவரியற்றிய ஆதிகாவ்யமான ஸ்ரீ ராமாயணத்தைத் தழுவி இந்நூலை யானியற்றுகின்றே னென்றவாறு. செய்யுளில் 'பெரும்பாலும்' என்ற சொல் இல்லையாயினும் கவியின் கருத்தை நோக்கி அது கூட்டிக் கொள்ளத்தக்கதே; வான்மீகி ராமாயணத்தில் இல்லாதனவும் அதனேடு முரண்பட்டனவுமான சில பல கதைகளும் இதில் காணப்படுகின்றனவன்றே. ... ... ... ... ... *

(நூற்பயனுரைத்தல்.)

12. நாடியபொருள் கைகூடும் ஞானமும் புகழுமுண்டாம்
வீடியல்வழியதாக்கும் வேரியங்கமலை நோக்கும்
நீடியவரக்கர் சேனை நீறுபட்டழிய வாகை
சூடிய சிலையிராமன் தோள்வலி கூறுவோர்க்கே. 12

(கருத்து)—அளவு கடந்த ராக்ஷஸ சேனைகள் சாம்பராயழிந்து போக வெற்றி மாலையை யணிந்த கோதண்டராமனுடைய விக்கிரமங்களைப் பாராட்டிப் பேசுமவர்கட்கு விரும்பும் பொருள்களெல்லாம் கைகூடும்; மனத் தெளிவும் கீர்த்தியுமுண்டாகும்; மோக்ஷ ஸாம்ராஜ்யத்திற்குப் புருஷகாரக்ருத்யம் செய்பவளான ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் அவர்களைக் கடாக்ஷிப்பள் என்றவாறு. ... ... ... *

நான்முகம் முற்றிற்று.

---

விண்ணப்பம்:—கம்பர் தமது இராமாயணத்தில் வான்மீகி ராமாயணத்திற் போலவே பாலகாண்டம் அயோத்தியா காண்டம் என முறையே காண்ட பேதங்களை வகுத்துள்ளார். ஒவ்வொரு காண்டத்திலும் கதைகளுக்கேற்பப் படலங்கள் பிரித்துள்ளார். பாலகாண்டத்தில், ஆற்றுப்படலம் முதலாகப் பரசுராமப்படலமீறாக இருபத்திரண்டு படலங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் முதலதான ஆற்றுப் படலத்தினுல் ஸரயூ நதியின் வளங்களையும், இரண்டாவதான நாட்டுப் படலத்தினுல் அந்நதிபாயப்பெற்ற கோசல நாட்டின் வளப்பத்தையும், மூன்றுவ

தான நகரப்படலத்தினால் அந்தக் கோசல நாட்டின் தலைநகரும் இராமபிரானது திருவவதார ஸ்தலமுமான அயோத்யா நகரத்தின் சிறப்புக்களையும், நான்காவதான அரசியற்படலத்தினால் அவ்வயோத்தி நகரத்தரசனாகிய தசரதமன்னவனது அரசாட்சிப் பெருமையையுஞ் சொல்லி முடித்திட்டு, ஐந்தாவதான திருவவதாரப்படலத்தினால் திருமால் இராமன்முதலான நான்கு திருமேனியுடனே அத்தசரதசக்ரவர்த்திக்குப் புதல்வனாகத் தோன்றினமையைக் கூறுகின்றார். அத்திருவவதாரப் படலத்திலிருந்தே கதையின்பம் அநுபவிக்கலாகும். முந்தின நான்கு படலங்களில் கவிசமயத்திற்கு ஏற்ற வருணனைகள் மலிந்திருக்கின்றன. அவற்றிலிருந்து சில பாடல்களை யெடுத்துத் தருவோம். ... ... ... ... *

---

(ஆற்றுப்படலம்—சரயுவெள்ளத்தின் வருணனை)

**13.** ஈக்கள் வண்டொடுமொய்ப்ப வரம்பிகந்து, ஊக்கமேமிக உள்தெளிவின்றியே
தேக்கெறிந்து வருதலின் தீம்புனல், வாக்குந் தேனுகர் மாக்களை மானுமே. 10

(திருமங்கையாழ்வா ரருளிச் செய்த பெரிய திருமொழியில் 1—1—10 "மஞ்சுலாஞ் சோலை வண்டறைமாநீர்" என்றவிடத்துப் பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பெற்ற ஏற்றமுடையது இச்செய்யுள்).

| | | | |
|---|---|---|---|
| தீம் புனல் | இனிமையான நீரையுடைய வெள்ளமானது | உள் தெளிவு இன்றியே | உள்ளே தெளிவில்லாமையும் பெற்று |
| ஈக்கள் வண்டொடு மொய்ப்ப | ஈக்களும் வண்டுகளும் கூடி மொய்க்கப் பெற்று | தேக்கு எறிந்து வருதலின் | தேக்கு மரங்களை யடித்துக் கொண்டு வருதலினால் |
| வரம்பு இகந்து | எல்லை கடந்து செல்லப் பெற்று | வாக்கும் தேன் நுகர் மாக்களை மானும் | வார்க்கப்படுகிற கள்ளைக் குடித்த மனித மிருகங்களை யொத்திருக்கும். |
| ஊக்கமே மிக | உற்சாகம் மிகப்பெற்று | | |

* * *—கூரத்தாழ்வானருளிச் செய்த ஸுந்தரபாஹுஸ்தவத்தில் நூபுர கங்கையின் [சிலம்பாற்றின்] வெள்ளத்தை வருணிப்பது மூன்றாம் சுலோகம் *க்வசித் த்வதரிதகாமிநீ * என்பது; இதன் முடிவில் "மது நிபீய மத்தா யதா" என்று கள்ளைக்குடித்தவொரு வ்யக்தியை உவமை கூறியிருக்கின்றது. அந்தவ்யக்தியின் நடையும் சிலம்பாற்றின் நடையும் ஒத்திருக்கும்படியை சுலோகம் முழுவதும் வருணித்துக் காட்டியுள்ளது. அந்த ச்லோகத்தை யடியொற்றியே இச்செய்யுள் பாடப்பட்டுள்ளது. கட்குடியர் படியும் சரயுவெள்ளத்தின்படியு மொத்திருப்பதாகச் சிலேடை நயம் காட்டுகின்றது. கட்குடியரிடத்துள்ள கள் நாற்றத்திற்காகவும் அவர்களது உடலிலும் வழிந்த கள்ளுக்காகவும் ஈக்களும் வண்டுகளும் மொய்த்தல் இயல்வு. [வரம்பு இகந்து] குடியர் தங்கள் குலமரியாதைகளைக் கடந்து யதேச்சையாக ஒழுகுதலும் இயல்பு. [ஊக்கமே மிக] குடியினால் உற்சாகமும் மிகும். [உள்தெளிவின்றியே] குடியினால் மனத் தெளிவு தொலைந்து கலக்கமே மிக்கிருக்கும். [தேக்கெறிந்து] ஏப்பமிடுதல் குடியின் காரியம். தீம்புனல்=தீம் என்று இனிமை. ... 10

**14.** முல்லையைக் குறிஞ்சியாக்கி மருதத்தை முல்லையாக்கிப்
புல்லிய நெய்தல்தன்னைப் பொருவரு மருதமாக்கி
எல்லையில் பொருள்களெல்லாம் இடைதடுமாறு நீரால்
செல்லுறு கதியிற்செல்லும் வினையெனச் சென்றதன்றே. 11

| | | | |
|---|---|---|---|
| முல்லையை குறிஞ்சி ஆக்கி | காட்டு நிலமாகிய முல்லை நிலத்தை மலையிடமாகிய குறிஞ்சி நிலமாக்கியும் | மருதத்தை முல்லை ஆக்கி | நாட்டிடமாகிய மருத நிலத்தைக் காட்டுநிலமான முல்லை நிலமாக்கியும் |



| | | | |
|---|---|---|---|
| புல்லிய நெய்தல் தன்னை | அற்ப பலனைத் தருகிற கடலிடமாகிய நெய்தல் நிலத்தை | இடை தடுமாறும் நீரால் | இடம் பெயர நிற்குந் தன்மையினால் |
| பொரு அரு மருதம் ஆக்கி | ஒப்பற்ற நாட்டு நிலமான மருத நிலமாக்கியும் (இவ்வண்ணமாக) | செல்உறு கதியில் செல்லும் வினை என | உயிர்கள் செல்லும் கதிகளிலெல்லாம் விடாது தொடர்ந்து செல்லுகின்ற புண்யபாப ரூபகருமங்களை யொத்து |
| எல்லையில் பொருள்கள் எல்லாம் | அந்தந்த எல்லைகளிலுள்ள பொருள்கள் யாவும் | சென்றது | சரயுவின் வெள்ளம் பெருகிற்று. |

* * *—"புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம்" என்று உத்தரராமசரித நாடகத்தில் பவபூதி மஹாகவி சொல்லுகிறபடி நிலங்களுக்கு வேறுபாடு நேருவது பெருவெள்ளத்தினாலாகும். முல்லை நிலத்தைக் குறிஞ்சிநில மாக்குவதும் மருத நிலத்தை முல்லைநிலமாக்குவதும் நெய்தல்நிலத்தை மருதநிலமாக்குவதுமான விபரீத சேஷ்டைகள் பெருவெள்ளங்களுக்கு இயல்பு. இவ்விதமான சேஷ்டைக்கு மிகப் பொருத்தமான உவமை கூறப்படுகின்றதிங்கு; புண்ய பாபரூப கருமங்களானவை தேவயோனியிற் பிறந்தவர்களை மனிதயோனியிற் பிறப்பித்தும், மனிதயோனிகளைத் தேவயோனிகளாக்கியும், தாவரங்களை விலங்குகளாக்கியும் இங்ஙனே மாறாட்டத்தை யுண்டாக்குவனவன்றோ. அத்தகைய இருவினைகளே ஏற்ற உவமையாயின. மூன்றாமடியின் முடிவில் நீரால் என்றது—நீர்மையினால் என்றபடி; நீர்மையாவது தன்மை.

தமிழர்கள் பூதலத்தை நால்வகையாகப் பிரித்துப் பேசுவர்—முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்று. காடும் காடு சார்ந்த இடமும் முல்லையாம்; மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சியாம்; நாடும் நாடு சார்ந்த இடமும் மருதமாம். கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தலாம். பெருவெள்ளம் எல்லா நிலங்களிலும் பரந்து செல்லும்போது ஓரிடத்துப் பொருள்கள் மற்றோரிடத்தே கொண்டு தள்ளப்படுதல் பற்றி ஒரு நிலத்தை மற்றொரு நிலமாக்கினதாக இங்குக் கூறிற்றென்க. ... 11

**15.** கல்லிடைப் பிறந்துபோந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைகளாலும் இயம்பரும் பொருளீதென்னத்
தொல்லையி னொன்றேயாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்ததன்றே. 12

| | | | |
|---|---|---|---|
| கல் இடை பிறந்து போந்து | இமயமலையில் தோன்றி அங்கு நின்றும் பெருகி வந்து | தொல்லையின் ஒன்றே ஆகி | ஆதிகாலத்தில் சரயு வெள்ள மென்கிற ஒரு பெயரோடிருந்து |
| கடல் இடை கலந்த நீத்தம் | ஸாகரத்திலே ஸங்கமம் பெற்ற ஸரயூநதீ ப்ரவாஹமானது, | துறைதொறும் | தடாகம் முதலிய பல்வேறு இடங்கள் தோறும், |
| எல்லை இல் மறைகளாலும் | அனந்தங்களான வேதங்களாலும் | பரந்த சூழ்ச்சி பல் பெரும் சமயம்சொல்லும் பொருள் போலும் | விசாலமான விமர்ச சக்தியையுடைய பலமதஸ்தர்கள் சொல்லும் பொருள் பலபடிப்பட்டிருப்பது போல |
| இயம்ப அரு பொருள் ஈது என்ன | அளவிட்டுச் சொல்ல முடியாத பரம்பொருளையொத்தது இது என்னலாம்படி. | பரந்தது | பலதலைத்தது. |

* * *—ஸரயூநதீப்ரவாஹமானது ஆதியில் ஒன்றேயாயிருந்ததற்கு ஓர் உவமையும், அது பலவிடங்களில் தங்கிப் பல பெயர்களால் வழங்கலானதற்கு மற்றோருவமையுமாக இரண்டு உவமைகள் இச்செய்யுளிற் கூறப்பட்டன. சரயு

இமயமலையில் உற்பத்தியாகி அங்குநின்று வெளிப்படுங் காலத்தில் ஒன்றேயாயிருந்ததற்கு ஏற்ற உவமை பரப்ரஹ்மமாகும்; அஃது ஆதியில் [மதபேதங்கள் உண்டாவதற்கு முன்னே] ஒரே பெயரால் வழங்கப்பட்டிருந்ததன்றோ. "தொக்கிலங்கியாறெல்லாம் பரந்தோடித் தொடுகடலே புக்கன்றிப் புறம் நிற்கமாட்டாத" (பெருமாள் திருமொழி 5-8) என்கிறபடியே அந்த வெள்ளம் ஸமுத்ரஸங்கமமடைவதற்குள் ஏரி, குளம், பல பல சிற்றாறு முதலிய இடங்களிலெல்லாம் பரந்து வெவ்வேறு பல பெயர்களை யடைந்ததற்கு ஏற்ற உவமை—பல்பெருஞ்சமயஞ் சொல்லும் பொருள். * ஏகமேவ அத்விதீயம் என்னப்படுகிற ஒரு பரப்ரஹ்மந்தானே பல சமயத்தவர்களது சூழ்ச்சிக்கு உட்பட்டுப் பலபடியாகின்றதன்றோ. இவ்விடத்து "மதிவிகற்பால் பிணங்குஞ்சமயம் பல பலவாக்கி அவையவைதோறு அணங்கும் பல பல வாக்கி நின்மூர்த்தி பரப்பி வைத்தாய்" என்ற நம்மாழ்வாரது திருவிருத்தப் பாசுரம் நினைப்பது.

மூன்றாமடியில் "பிரிந்த சூழ்ச்சி" யென்றும் பாடங் காணகிறது. ... 19

**16.** தாதுகு சோலைதோறும் சண்பகக் காடுதோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணத் தடங்கள் தோறும்
மாதவி வேலிப் பூகவனந் தொறும் வயல்கள் தோறும்
ஓதியவுடம்பு தோறும் உயிரென வுலாய தன்றே.

(கருத்து.) மது வொழுகுகின்ற எல்லாப் பொழில்களிலும் சண்பக வனங்களிலும் பூம்பொய்கைகளிலும் புதிய மணத்தைக் கொண்ட தடாகங்களிலும் குருக்கத்திச் செடிகளை வேலியாகக் கொண்ட பாக்குத் தோப்புகளிலும் சரயு வெள்ளம் உலாவிற்று; எங்ஙன மென்னில், ஜீவாத்மா நாற்கதிகளிலுமுள்ள உடம்புகளிற் புகுந்து செல்லுதல் போல. .... ... ... ... 20

(இனி, கோசல நாட்டின் சிறப்பைப் பேசுகின்றேனென்றல்.)

**17.** வாங்கரும் பாதநான்கும் வகுத்த வான்மீகி யென்பான்
தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை அன்பெனு நறவை மாந்தி
மூங்கையான் பேசலுற்றா னென்னயான் மொழியலுற்றேன். 1

| | | | |
|---|---|---|---|
| வாங்க அரும் பாதம் நான்கும் வகுத்த | மாற்ற வொண்ணாத நான்கு பாதங்களையுடைய சுலோகங்களை இயற்றிய | ஆங்கு அவன் புகழ்ந்த நாட்டை | அந்த ஆதிகாவியத்திலே அந்த கவித்தலைவன் கொண்டாடிக் கூறிய கோசல நாட்டை |
| வான்மீகி என்பான் | வான்மீகி என்கிற ஆதிகவியானவர் | யான் | அறிவிலியாகிய நான் |
| தேவரும் செவிகள் ஆர பருக | தேவலோகத்தவர்களும் காதாரப்பருகும்படி | அன்பு எனும் நறவை மாந்தி | அன்பாகிற மதுவைப் பருகி |
| | | மூங்கையான் பேசலுற்றான் என்ன | ஊமை பேசத் தொடங்கினது போல |
| தீம் கவி செய்தான் | இனிய கவிகளைக் கொண்ட ஸ்ரீராமாயணத்தைச் செய்தருளினன்; | மொழியல் உற்றேன் | வருணிக்கத் தொடங்கி நின்றேன். |

* * *—ஸ்ரீராமபிரானுடைய திருவவதாரம் அயோத்திமா நகரில்; அந்நகர் கோஸல நாட்டிலுள்ளது. நாட்டை வருணித்து நகரத்தை வருணிக்க ப்ராப்தமா



யிற்று. கோஸல நாட்டை வருணிக்கக் கவிசக்ரவர்த்தியான வான்மீகி முனிவரே தகுதியுடையா ரென்றும், அந்த வருணனையில் தாம் இறங்குவது அபஹாஸ்ய மென்றும் அவையடக்க முறையிற் கூறுவது இச்செய்யுள்.

"வளங்குருகூர்ச்சடகோபன் பாட்டாய தமிழ்மாலை யாயிரத்துளிப்பத்தும் கேட்டு ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி திருவாய்மொழி தேவர்களுக்கும் போக்யமாவது போல ஸ்ரீராமாயணமும் தேவபோக்யமாமென்னத் தட்டில்லையாதலால் "தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்" என்றார். வால்மீகி ராமாயணத்திலுள்ள சுலோகங்களில் ஏதேனுமொரு பாதத்தை யெடுத்துவிட்டு அந்தஸ்தானத்தில் வேறு சில சொற்றொடர்களைத் தொடுத்து ஒருவர் புகவிட்டால் அசடு தட்டிக்கிடக்கு மென்னுங் கருத்துப்பட "வாங்கரும் பாதநான்கும் வகுத்த" என்றார்; இதனால் ஸ்ரீராமாயண ஸூக்திகளின் ஒப்புயர்வின்மை தெரிவிக்கப் பட்டதாயிற்று. ... 1

**18.** நீரிடை யுறங்குஞ் சங்கம் நிழலிடை யுறங்கும் மேதி
தாரிடை யுறங்கும் வண்டு தாமரை யுறங்குஞ் செய்யாள்
தூரிடை யுறங்கு மாமை துறையிடை யுறங்கு மிப்பி
போரிடை யுறங்கு மன்னம் பொழிலிடை யுறங்கு மேகம். 5

(கருத்து.) சங்குகள் நீரிடத்துக் கிடக்கும்; எருமைகள் மரங்களின் நிழலிலே யுறங்கிக் கிடக்கும்; வண்டுகள் பூமாலைகளிலுறங்கும்; ஸ்ரீமஹாலக்ஷ்மி தாமரை மலரில் இனிதமர்ந்திருப்பாள்; ஆமைகள் புதர்களிலமர்ந்திருக்கும்; முத்துச் சிப்பிகள் நீர்த்துறைகளிற் கிடக்கும்; அன்னப்பறவைகள் நெற்போரில் தங்கியிருக்கும்; மேகங்கள் சோலைகளில் தவழ்ந்திருக்குமென இயல்பு நவிற்சி (ஸ்வபாவோக்தி); செய்யுளின் முடிவில், மேகம் என்றும் தோகை யென்றும் பாட பேதங்கள். தோகை-மயில். ... .... ... ... ... 5

**19.** வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மையில்லை நேர் செறுநரின்மையால்
உண்மையில்லை பொய்யுரையிலாமையால்
வெண்மையில்லை பல்கேள்வி மேவலால். 53

(கருத்து.) கோசல நாட்டில் தரித்திரமென்பது சிறிது மில்லாமையால் தானத்தின் சிறப்பு தெரிகிறதில்லை; எதிரம்பு கோத்துப் போர்புரிவாரில்லாமையால் விக்கிரமச் சிறப்பு தெரிவதில்லை; பொய் சொல்லுவ தென்பது கிடையாதாதலால் ஸத்யத்தின் மஹிமை தெரிவதில்லை; பஹுச்ருதர்கள் மலிந்திருப்பதால் அஜ்ஞான ப்ரஸக்தியேயில்லை. அங்குள்ளவர்கள் பெரும்பாலும் செல்வம் மிக்கவர்களாகவும் ஸர்வபூத ஸுஹ்ருத்துக்களாகவும் ஸத்யவாதிகளாகவும் பஹுச்ருதர்களாகவும் விளங்கின ரென்றவாறு. ... .... ... ... 53

(3. நகரப்படலம்—அயோத்திமா நகரின் சிறப்புரைத்தல்.)

**20.** செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன் முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
எவ்வுலகத்தோர் யாவருந் தவஞ்செய் தேறுவானுதரிக்கின்ற
அவ்வுலகத்தோ ரிழிவதற்கருத்தி புரிகின்ற தயோத்திமா நகரம். 1

| | | | |
|---|---|---|---|
| அயோத்தி மா நகரம் | மிகச் சிறந்த அயோத்யா நகரமானது | வடநூல் முனிவரும் புகழ்ந்தது | வடநூலில் நிபுணர்களான மஹர்ஷிகளும் புகழநின்றது; (அதுவன்றியும்) |
| செவ்விய மதுரம் சேர்ந்த நல் பொருளின் | அழகியனவும் சுவைமிக்கனவும் சிறந்த பொருளாற் சிறப்புடையனவும் | வரம்பு இல் எவ்வுலகத்தோர் யாவரும் | அளவில்லாத எல்லா வுலகங்களிலுமுள்ள எல்லாராலும் |
| | | தவம் செய்து | தவம் புரிந்து |
| கூரிய | நுட்பமாயுள்ளனவும் | ஏறுவான் ஆதரிக்கின்ற | பெறவிரும்பப் படுகின்ற |
| தீம் சொல் வெவ்விய | இனிப்பைத் தருவனவுமான சொற்களைக் கொண்ட | அவ் வுலகத்தோர் | அந்த ஸ்ரீவைகுண்டத்திலுள்ளாரும் |
| கவிஞர் அனைவரும் | புலவர்களெல்லோரும் | இழிவதற்கு அருத்தி புரிகின்றது | இறங்கி வந்து இங்கே வசிக்க விரும்பப் பெறுவதுமாம். |

"வேத வேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே" என்றபடி பரம புருஷன்தானே தசரதாத்மஜனுக வந்து பிறந்தவிடம் இவ்வயோத்திமா நகராதலால் இது கவிகளாலும் மஹர்ஷிகளாலும் மிகமிகக் கொண்டாடப் படுவதுந்தவிர "மண்ணிலிதுபோலு நகரில்லையென வானவர்கள் தாம் மலர்கள் தூய், நண்ணியுறைகின்ற நகர் நந்திபுர விண்ணகரம்" என்றபடி பரமபதத்திலுள்ளாரும் இங்கே வந்து சேர விரும்பவும் பெற்றதென்று நகரின் ஒப்புயர்வற்ற பெருமை கூறப்பட்டது. "தேவாநாம் பூ: அயோத்யா" என்று வேதத்திலேயே ஓதப்பட்டது அயோத்யா புரி; அதுவே இங்கு வந்து தோன்றினமையால் அங்குள்ளாரும் இங்கு வந்து வஸிக்க விரும்புவதில் வியப்பில்லை யென்க. ... ... ... 1

**21.** நிலமகள் முகமோ திலதமோ கண்ணே நிறைநெடுமங்கல நாணே
இலகு பூண்முலைமேலாரமோ வுயிரின் இருக்கையோ திருமகட்கினிய
மலர்கொலோ மாயோன் மார்பினன்மணிகள் வைத்த பொற்பெட்டியோ வானோர்
உலகின் மேலுலகோ வூழியினிறுதியுறையுளோ யாதெனவுரைப்பாம். 2

(அயோத்திமாநகரமானது)

| | | | |
|---|---|---|---|
| நிலம் மகள் முகமோ | பூமி தேவியின் திருமுக மண்டலமோ? | மாயோன் மார்பில் நல்மணிகள் வைத்த பொன் பெட்டியோ | எம்பெருமானுடைய திருமார்பிலணியும் கௌஸ்துப மணி முதலான மணிகள் சேமித்து வைப்பதற்குரிய நல்ல பெட்டிதானோ? |
| திலதமோ | முகத்திலணியும் திலகந்தானோ? | | |
| கண்ணே | அப்பூமிதேவியின் திருக்கண்ணேயோ? | | |
| நிறை நெடு மங்கலம் நாணே | நிறைந்த நீண்ட மங்கள ஸூத்ரமோ? | வானோர் உலகின் மேல் உலகோ | பரமபதத்திற்கும் மேற்பட்டதான வொரு லோகமோ? |
| முலை மேல் பூண் இலகு ஆரமோ | தனத்தின்மீது தரிக்கப்பட்டு விளங்குகிற ரத்ன ஹாரமோ? | ஊழியின் இறுதி உறையுளோ | பிரளய காலத்தில் எல்லாப் பொருள்களும் தங்குமிடமான திருமாலின் திருவயிறோ? |
| உயிரின் இருக்கையோ | ப்ராண ஸ்தானமோ! | | |
| திருமகட்கு இனிய மலர் கொலோ | ஸ்ரீமஹாலக்ஷ்மிக்குப் பரம போக்ய ஸ்தலமான தாமரை மலரோ? | யாது என உரைப்பாம் | இவற்றுள் எது வென்று நிச்சயித்துச் சொல்லுவோம். |



**22.** உமைக்கொரு பாகத் தொருவனு மிருவர்க்கொரு தனிக்கொழுநனும் மலர்மேல்
கமைப்பெருஞ் செல்வக் கடவுளு முவமை கண்டிலரங்கது காண்பான்
அமைப்பருங்காதலது பிடிந்துந்த அந்தரஞ் சந்திராதித்தர்
இமைப்பிலர் திரிவர் இதுவலாலிதனுக்கு இயம்பலாமேது மற்றியாதோ. 3

| | | | |
|---|---|---|---|
| உமைக்கு ஒரு பாகத்து ஒருவனும் | பார்வதியை ஒரு புறத்தே கொண்ட பரமசிவனும் | அது காண்பான் | அதனைக் காண்பதற்காக |
| இருவர்க்கு ஒரு தனி கொழுநனும் | பூமகளும் நிலமகளுமான தேவியரிருவர்க்கு ஒப்பற்ற நாதனுன நாராயண மூர்த்தியும் | அமைப்பு அரு காதல் அது பிடித்து உந்த | அடக்க முடியாத ஆசை பிடித்துத் தள்ள |
| மலர் மேல் கமை பெரு செல்வம் கடவுளும் | தாமரை மலரில் தோன்றிப் பொறுமையைப் பெருஞ் செல்வமாகக் கொண்ட பிரமனும் | சந்திர ஆதித்தர் இமைப்பு இலர் அந்தரம் திரிவர் | சந்திர சூரியர்கள் இமைகொட்டாதவர்களாய் இன்னமும் ஆகாசத்தில் திரிகிறார்கள்; |
| | | இதனுக்கு | அவர்கள் இப்படி திரிவதற்கு |
| | | இது அலால் | இக்காரணம் தவிர |
| உவமை கண்டிலர் | அயோத்தியா நகர்க்கு ஒப்பானதொரு நகரைக் காணுதவராயினர்; | இயம்பல் ஆம் ஏது மற்று யாதோ | சொல்லக்கூடிய வேறு காரணமுளதோ? |

***—அரனும் அரியும் அயனுமான மும்மூர்த்திகளும் அயோத்திக்கு ஒப்பான நகரம் வேறொன்று காணக் கிடைக்குமோவென்று தங்களுடைய ஞானக் கண்ணினல் தேடிப்பார்த்துக் கண்டிலர்; எங்கும் திரிந்து கட்கண்ணினலேயே தேடிப்பார்த்தால் கிடைக்குமோ வென்று கருதி, புவனமெங்கும் திரிந்து செல்லக் கூடிய ஆற்றல் பெற்ற சந்திர ஸூரியர்கட்குக் கட்டளையிட, அவர்கள் இன்னமும் நாடொறும் ஆகாயத்தேதிரிந்து தேடிப்பார்க்கின்றனர்-என்னுமிந்த உத்ப்ரேக்ஷையினல் அயோத்தியின் ஒப்பிலாமை காட்டப்பட்டதாம். .... ... *

**23.** அயின்முகக் குலிசத்தமரர்கோனகரும் அளகையுமென்றிவையயனுர்
பயிலுறவுற்றபடி பெரும்பான்மை யிப்பெருந் திருநகர்படைப்பான்
மயன்முதல் தெய்வத் தச்சரும் தத்தம் மனத்தொழில் நாணினர் மறந்தார்
புயல்தொடு குடுமிநெடுநிலைமாடத் திந்நகர் புகலுமா றெவனே. 4

| | | | |
|---|---|---|---|
| அயில் முகம் குலிசத்து அமரர் கோன் நகரும் | கூர்மையான முகத்தையுடைய வஜ்ராயுதத்தை யேந்திய தேவேந்திரனது நகரமான அமராவதியும் | மயன் முதல் தெய்வம் தச்சரும் | மயன் முதலான தேவ சிற்பிகளும் |
| அளகையும் | குபேரபட்டணமாகிய அளகாபுரியும் | நாணினர் | இந்நகரத்தின் சிறப்பைக் கண்டு வெட்கினவர்களாய் |
| என்ற இவை | ஆகிய இவ்விருநகரங்களையும் | தம் தம் மனம் தொழில் மறந்தார் | தங்கள் தங்களுடைய ஸங்கற்ப சிற்பத்தை மறந்தொழிந்தார்கள்; (எனவே) |
| அயனுர் | பிரமதேவன் | | |
| பயில் உறவு உற்ற படி | (படைத்துப்) பயிற்சி செய்து கொண்டதற் கிணங்க | புயல் தொடு குடுமி நெடு நிலை மாடத்து இ நகர் | மேகமண்டலத்தளவு மளாவிய சிகரங்களையுடைய நீண்ட மேல் நிலைகளைக் கொண்ட உப்பரிகை வீடுகளையுடையதான இவ்வயோத்தி நகரை |
| பெரு பான்மை இ பெரு திரு நகர் படைப்பான் | மிக்க சிறப்பு வாய்ந்த மிக வழகிய இவ்வயோத்திமா நகரை நிருமித்தனன்; | புகலும் ஆறு எவனே | வருணித்துச் சொல்லும் வகை யாதோ? |

* * *—ஸ்ரீ குணரத்நகோசத்தில் (60) "ஸீதாவதாரமுகமேத தமுஷ்ய யோக்யா" என்றருளிச் செய்திருப்பதை யடியொற்றி இப்பாட்டில் முன்னிரண்டடிகள் இயற்றப்பட்டன. ஔதார்யம் முதலான எல்லாத் திருக்குணங்களும் ஸ்ரீ ரங்க நாச்சியாரான நிலையிலேதான் நிரம்பியுள்ளனவென்றும், ஸீதாபிராட்டியாக அவதரித்தது முதலான மற்றையவதாரங்கள் இவ்வமைப்பு பழகுவதற்காகச் செய்யப்பட்டவை என்றும் அந்தச்லோகத்தில் பட்டர் அருளிச்செய்ததுபோல, அழகிலும் ஐச்வர்ய ஸம்ருத்தியிலும் மிக்கவையாகப் புகழ்பெற்ற அமராவதியும் அளகாபுரியும் அயோத்திமாநகரைப் படைத்தற்குப் பழகும்பொருட்டுப் படைக்கப் பட்டவை யென்று இங்குக் கூறப்பட்டது. .... .... ....

24. புண்ணியம்புரிந்தோர் புகுவதுதுறக்க மென்னுமீதருமறைப் பொருளே
மண்ணிடையாவ ரிராகவனன்றி மாதவமறத்தொடும் வளர்த்தார்
எண்ணருங்குணத்தி னவனினிதிருந்திவ் வேழுலகாளிட மென்றால்
ஒண்ணுமோவதனின் வேறொருபோக முறைவிடமுண்டென வுரைத்தல். (5)

| | | | |
|---|---|---|---|
| புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம் என்னும் ஈது | (இஹலோகத்தில்) புண்ணியம் செய்தவர்கள் (மறுமையில் இன்பம் நுகர்வதற்குச்) சேருமிடம் ஸ்வர்க்க லோகமாம்—என்கிற இவ் விஷயம் | எண் அரு குணத்தின் அவன் | (அங்ஙனம் அறத்தை நிலைநாட்டிய) எண்ணிறந்த திருக்குணங்களையுடைய அவ்விராமன் |
| அரு மறை பொருளே | அரிய வேதங்களில் தேர்ந்த பொருளேயாகும்; | இனிது இருந்து | திருவுள்ளத்திற்கு உகப்பாக நீண்ட காலமெழுந்தருளியிருந்து |
| மண் இடை | இந்நிலவுலகத்திலே | இ ஏழ் உலகு ஆள் இடம் என்றால் | இவ்வேழுலகங்களையும் ஆளுதற்குரிய இடம் இவ்வயோத்திமாநகரமென்றால் |
| அறத்தொடும் மா தவம் வளர்த்தார் | (மேலே சொன்ன சிறப்புடைய தருமத்தையும் மஹத்தான தபஸ்ஸையும் நன்றாகச் செய்தவர் | அதனின் | அந்நகரத்திற்காட்டிலும் மேம்பட்டதாகிய |
| இராகவன் அன்றி யார் | இராமனைத் தவிர்த்து வேறு எவரிருக்கின்றனர்? (எவருமிலர்). | போகம் உறைவு வேறு ஒரு இடம் உண்டு என உரைத்தல் ஒண்ணுமோ | பலவகைச் சுகாநுபவங்களுக்கு மிருப்பிடமான வேறோருலகமுள்ளதென்று சொல்லத் தகுமோ? |

* * * வேதங்களில் "ஸ்வர்க்ககாமோ யஜேத" என்று பலவிடங்களிலும் ஓதப்படுகிறது; ஸ்வர்க்க லோகத்தை யடைவதற்கு ஸாதனமாகப் பலவகையான ஸுக்ருதங்கள் ஓதப்பட்டுள்ளன; அப்படிப்பட்ட நல்வினைகளைச் செய்தவர்கள் இறந்தபின் போய்ச்சேர்ந்து ஸுகாநுபவம் செய்யுமிடம் தேவலோகமென்பது நூற்கொள்கை; எனினும், அவ்வேத முதல்வனே தர்மஸ்தாபநார்த்தமாக ரகுகுலத்தில் சக்ரவர்த்தி திருமகனாய்த் தோன்றி ஸகலலோகங்களையும் ஆள்வதற்கு அரசாட்சி புரிந்தவிடம் இவ்வயோத்திமா நகரமென்றால் இதற்கும் மேலான வேறொரு போக பூமி உண்டென்னத் தகாது என்று இந்நகரின் சிறப்பு சொல்லிற்றாயிற்று. *

25. தங்குபேரருளுந் தருமமுந்துணையாய்த் தம்பகைப்புலன்க ளைந்தவிக்கும்
பொங்குமாதவமும் ஞானமும்புரிந்தோர் யாவர்க்கும் புகலிடமான
செங்கண்மால்பிறந்தாண் டளப்பருங்காலந் திருவின்வீற்றிருந்தமை தெளிந்தால்
அங்கண்மாஞாலத் திந்நகரொக்கும் பொன்னகர் அமரர்நாட்டியாதோ. (6)



| | | | |
|---|---|---|---|
| தங்கு பேர் அருளும் | தம்மிடத்துத் தங்கிய பரம கருணையும் | செங்கண் மால் பிறந்து | புண்டரீகாக்ஷ பகவான் திருவவதரித்து |
| தருமமும் துணை ஆய் | தருமமும் துணையாகப் பெற்று | ஆண்டு | அவ்வயோத்திமாநகரில் |
| தம் பகை புலன்கள் ஐந்து அவிக்கும் | தமக்கு விரோதிகளான பஞ்சேந்திரியங்களையும் அடக்குபவர்களாகி | அளப்ப அரு காலம் | அளவிடமுடியாத நீண்ட காலத்தளவும் |
| பொங்கு மா தவமும் ஞானமும் புரிந்தோர் யாவர்க்கும் | வளர்ந்த தவத்தையும் ஞானத்தையும் பெற்றுள்ள யாவர்க்கும் | திருவின் | பிராட்டியோடு கூட |
| புகல் இடம் ஆன | சரண்யனை | வீற்றிருந்தனன் என்றால் | எழுந்தருளியிருந்தா னென்றால் |
| | | அம் கண் மா ஞாலத்து அ நகர் ஒக்கும் | அழகிய இடங்களைக்கொண்ட பெரிய பூமியிலுள்ள அவ்வயோத்தி மாநகரைப் போன்ற |
| | | பொன் நகர் | அழகிய நகரம் |
| | | அமரர் நாடு யாதோ | தேவலோகத்தில் தானுண்டோ? |

* * * "தச வர்ஷ ஸஹஸ்ராணி தச வர்ஷ சதாநி ச, ராமோ ராஜ்ய முபாஸித்வா" என்று ஸ்ரீ ராமாயணத்திற் கூறியபடி பதினோராயிரமாண்டு பெருமாள் ஸீதாபிராட்டியுடனே யெழுந்தருளியிருந்து செங்கோல் செலுத்திய மஹாநகரம் இந்நிலத்தில் அயோத்யாபுரி யொன்றேயானபின்பு இதற்கொப்பானதொரு நகரம் விண்ணுலகிலுமில்லை யென்னத் தட்டுண்டோ? என்றவாறு. ....

26. அரசெலாமவண அணியெலாமவண அரும்பெறல் மணியெலாமவண
புரைசைமாகளிறும் புரவியுந்தேரும் பூதலத்தி யாவையுமவண
விரசுவார் முனிவர் விண்ணவரியக்கர் விஞ்சையர் முதலினோ ரென்றால்
உரைசெய்வேன்யானே யானபோததனுக்கு உவமைதானரிதரோவுளதோ. 7

| | | | |
|---|---|---|---|
| அரசு எலாம் அவண | எல்லா அரசர்களும் அவ்விடத்தே யுள்ளார்கள்; | முனிவர் விண்ணவர் இயக்கர் விஞ்சையர் முதலினோர் | ரிஷிகள் தேவர்கள் யக்ஷர்கள் வித்யாதரர்கள் முதலானவர்களும் |
| அணி எலாம் அவண | ஆபரணங்களென்று சொல்லப்படுமவை யெல்லாம் அவ்விடத்தேயுள்ளன; | விரசுவார் | இங்கே மனம் பொருந்தி வர்த்திப்பர்கள்; |
| அரு பெறல் மணி எலாம் அவண | பெறுதற்கரியனவான ரத்தினங்களெல்லாம் அவ்விடத்தேயுள்ளன; | என்றால் | என்று இத்தனை பெருமைகள் சொல்ல நிற்கும் போது, |
| புரைசை மா களிறும் | கழுத்திடு கயிற்றையுடைய மதயானைகளும் | உரை செய்வேன் யானே ஆன போது | (இந்நகரத்தை) வருணித்துக் கூறுபவன் சிற்றறிவினனான யானே யாயிருக்கையில் |
| புரவியும் தேரும் | குதிரைகளும் தேர்களும் | | |
| பூதலத்து யாவையும் அவண | இப்பூமண்டலத்தி லிருக்கக்கூடிய மற்றெல்லாப் பொருள்களும் அவ்விடத்தே யுள்ளன; | அதனுக்கு உவமை தான் உளதோ அரிது | அந்த அயோத்திமாநகருக்கு உபமானமாயிருப்பதொரு நகரந்தானுண்டோ? (உவமை) அருமையானதே. |

* * *—எல்லா வளங்களும் நிரம்பிய இந்நகரத்தைப் போன்ற வேறொரு சிறந்த நகரம் எங்குமில்லை யென்னுமிடத்தை உபபாதித்துக் கூறினாராயிற்று.

## 4. அரசியற்படலம்—தசரதனது அரசாட்சி முறைமை கூறுவது.

**27.** அம்மானகருக்கரசன் அரசர்க்கரசன்
செம்மாண் தனிக்கோல் உலகேழினுஞ் செல்ல நின்றுன்
இம்மாண்கதைக்கு ஓரிறையாய விராமனென்னும்
மொய்ம்மாண் கழலோன் தரு நல்லறமூர்த்தி யன்னுன். 1

| | | | |
|---|---|---|---|
| மாண் அ நகருக்கு | மாட்சிமை தங்கிய அவ் வயோத்திமாநகர்க்கு | இ மாண் கதைக்கு ஓர் இறை ஆய | (ராமாயண மென்கிற) இப் பெரிய கதைக்குத் தலைவனாகிய |
| அரசன் | அரசனுவான் (எப்படிப்பட்டவனென்னில்) | இராமன் என்னும் | ஸ்ரீராமபிரானென்கிற |
| அரசர்க்கு அரசன் | (உலகிலுள்ள) ஸகல ராஜாக்களுக்கும் தலைவனுன ஸார்வபௌமன் ; | மொய் மாண் கழலோன் தரு | மிகச்சிறந்த வீரக்கழலணிந்த திருக்குமாரனைப் பெற்றெடுத்தளித்த |
| மாண் தனி செம் கோல் | மாட்சிமையுள்ள ஒப்பற்ற தனது செவ்விய அரசாட்சி | நல் அறம் மூர்த்தி அன்னுன் | சிறந்த தரும மூர்த்தியானவன். |
| உலகு ஏழினும் செல்ல நின்றுன் | ஏழுலகங்களிலும் தடையின்றி நடக்கும்படி நின்றவன் ; | | |

* * *—சரயூநதி பாயப்பெற்ற கோசல நாட்டின்கணுள்ள அயோத்திமா நகரின் சிறப்பை வருணித்தபின் அந்நகர்க்கு அரசனுகிய தசரத சக்கரவர்த்தியினது அரசாட்சி முறைமை கூறத்தொடங்கலாயிற்று. அவ்வயோத்திமா நகரையாண்டவன் யாவனென்னில், ராஜாதி ராஜனும், நீதி தவருத தனது செங்கோலை இங்கிவ்வுலகத்தில் மட்டுமன்றிக்கே ஏழுலகங்களிலும் தடையில்லாமல் நடத்துபவனும், ராமாயண கதைக்குப் பிரதான நாயகனை ஸ்ரீராம பிரானுக்குத் தந்தையுமான தசரத சக்கரவர்த்தி என்றதாயிற்று. ... ... ... *

**28.** ஆதிமறையும் அருளும் அறனும் அமைவும்
ஏதின்மிடல்வீரமும் ஈகையுமெண்ணில் யாவும்
நீதிநிலையும் இவைநேமியினேர்க்கு நின்ற
பாதிமுழுதும் இவற்கே பணிகேட்ப மன்னே. 2

| | | | |
|---|---|---|---|
| ஆதி மறையும் | முதன்மையான வேதமோதுதலும் | எண்ணில் | ஆராய்ந்து சொல்லுமிடத்து |
| அருளும் அறனும் அமைவும் | இரக்கமும் தருமமும் சாந்தகுணமும் | நேமியினேர்க்கு | மற்றையரசர்களுக்கு |
| ஏதுஇல் மிடல் வீரமும் | குற்றமற்ற சௌர்ய வீர்யங்களும் | பாதி நின்ற | பரிபூர்த்தியா யிராமல் குறைந்தே நின்றன ; |
| ஈகையும் | ஔதார்யமும் | இவற்கே | இந்த தசரத சக்ரவர்த்திக்கே |
| நீதி நிலையும் யாவும் இவை | நீதி நெறியில் தவருது நிற்றலுமாகிய (மன்னவர்க்குரிய) இக்குணங்களெல்லாம் | முழுதும் | முழுமையும் [ஸகல ஸத்குணங்களும்] |
| | | பணி கேட்ப | அடிமைத் தொழில் புரிந்து கொண்டிருந்தன. |

* * *—அறிவு இரக்கம் தரும சிந்தை பொறுமை சௌர்யவீர்ய பராக்ரமங்கள் வள்ளல்தனம் நீதிநெறிநிற்றல் முதலிய அரசர்க்கு வேண்டிய இக்குணங்களெல்லாம் மற்றைச் சக்கரவர்த்திகளிடத்துமுண்டென்ருலும், அவையெல்லாங் கூடினுலுங்கூட தசரத மன்னவனிடத்துள்ள குணங்களுள் பாதிக்குமீடாகா



என்றதாயிற்று. நேமியினேர் =நேமியென்று சக்கரத்திற்குப்பெயர்; அரசர் செலுத்துங் கட்டளையைச் சக்கரமென்று சொல்லுவராதலால் நேமியினேரென்று சக்ரவர்த்திகளுக்குப் பெயராயிற்று. இரண்டாமடியில், எண் இல் யாவும்—எண்ணிறந்த யாவும் என்னவுமாம். பணிகேட்ப—வசப்பட்டிருந்தனவென்கை. .... ... *

**29** தாயொக்குமன்பின் தவமொக்கு நலம்பயப்பின்
சேயொக்கு முன்னின்றெரு செல்கதி யுய்க்கு நீரால்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்கு கேள்வி
ஆயப்புகுங்கால் அறிவொக்குமெவர்க்கு மன்னுன். 4

| | | | |
|---|---|---|---|
| அன்னுன் எவர்க்கும் | அத்தசரதமன்னவன் எல்லோருக்கும் | சேய் ஒக்கும் | புத்திரனை யொத்திருப்பன் ; |
| அன்பின் தாய் ஒக்கும் | அன்புடைமையில் பெற்ற தாயைப் போன்றிருப்பவன் ; | நோய் ஒக்கும் என்னில் மருந்து ஒக்கும் | துஷ்டர்களுக்குத் தண்டனை கொடுத்து நோயை யொப்பானுயினும் ஹிதபரனுகையாலே மருந்தையு மொப்பான் ; |
| நலம் பயப்பின் | உரிய நன்மைகளை யெல்லாம் செய்து தருவதில் | | |
| தவம் ஒக்கும் | தவத்தையொத்திருப்பன் ; | நுணங்கு கேள்வி ஆய புகும் கால் | ஸூக்ஷ்மமான நூற்பொருள்களை ஆராயப்புகுமிடத்து |
| முன் நின்று ஒரு செல்கதி உய்க்கும் நீரால் | தலைவனுய் நின்று நல்ல கதியிற் கொண்டு சேர்ப்பதில் | அறிவு ஒக்கும் | ஞானமே வடிவெடுத்தவனென்னத்தகுவான். |

* * *—அத்தசரதமன்னவனது நற்குணத்திரள்களிவை. அன்பு செய்வதில் தாய்க்கு மேற்பட்டாரில்லாமையாலே எல்லாரிடத்தும் அன்பு பூண்டொழுகுதலில் தாயைப் போன்றிருப்பன்; வேண்டிய நன்மைகளை யெல்லாம் தரவல்லது தவமாதலால் அவரவர்கட்கு நன்மை பயக்குந் திறனில் தபஸ்ஸைப் போன்றிருப்பன்; தவமென்றது ஸுக்ருத பர்யாயம். புத்திரன் தோன்றுவது தந்தை தாயர்க்கு உயர்கதி யளித்தற்பொருட்டென்று வேதங் கூறும்; [புத் என்னும் நரகத்தையடையாதபடி காப்பவன் புத்திரன்] ஆகவே உயர்கதி பெறுவித்தலில் புத்திரனையொத்திருப்பன். அரசர்களுக்கு தண்ட தரத்வமும் தண்ணளியுமாகிய இரண்டும் இன்றியமையாதனவாதலால் 'நோயொக்கும், மருந்தொக்கும்' என்ருர்; தீயவழியிற் சென்ருேரைத் தண்டித்து வருந்தச் செய்வதனுல் நோயை யொப்பான்; ஆயினும் தண்ணளியுஞ் செய்வதனுல் மருந்தையு மொப்பான். இதற்கு வேறுவகையாகவும் பொருள் கூறுவர்; எவனுயினு மொருவன் பிறர்க்குத் துன்பத்தைச் செய்து வியாதியை யொப்பானுயின், அவனுக்கு உடனே அழிவைச் செய்தலால் மருந்தை யொப்பான். (அல்லது) யாருக்காவது வியாதி நேருமாயின் உடனே அதனை யொழிக்க முயலுதலால் சக்ரவர்த்தி தானே மருந்து போன்றவனுவான் என்று. ... ... .... ... ... .... *

**30.** ஈந்தே கடந்தா னிரப்போர்கடல் எண்ணில் நன்னுல்
ஆய்ந்தே கடந்தான் அறிவென்னு மளக்கர் வாளால்
காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவின்தொடர் போக பௌவம். 5

| | | | |
|---|---|---|---|
| (அத்தசரதமன்னவன்) இரப்போர் கடல் | யாசகர்களாகிற கடலை | ஈந்தே கடந்தான் | தானஞ்செய்தலாகிறதோணியைக்கொண்டே தாண்டினுன் ; |

| | | | |
|---|---|---|---|
| எண் இல் நல் நூல் என்னும் அளக்கர் | எண்ணிறந்த நல்ல சாஸ்த்ர மென்னுங் கடலை | வாளால் காய்ந்தே கடந்தான் | ஆயுதத்திலுலழித்தலாகிய புணையைக் கொண்டே கடந்தான் ; |
| அறிவு ஆய்ந்தே கடந்தான் | அறிவினுல் ஆராய்ச்சி செய்வதாகிற தோணியைக் கொண்டே கடந்தான் ; | திருவின் தொடர் போகம் பௌவர் . | செல்வத்தினேடு தொடர்ந்துள்ள இவ்வுலகவின்பமாகிய கடலை |
| பகை வேலை | பகைவராகிய கடலை | கருத்து முற்ற தோய்ந்தே கடந்தான் | மனம் திருததியடையும்படி புசித்தலாகிற புணையைக் கொண்டே கடந்தான். |

* * *—தசரத மன்னவன் ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி யாசகர்களைத் திருத்தி செய்வித்தான் ; நுண்பொருள் நிரம்பிய சாஸ்திரங்களை யெல்லாம் ஆர அமர ஆராய்ச்சி செய்தான் ; எதிரிகளையெல்லாம் வாளாலறுத் தொழித்தான் ; உலகவின்பங்களை யெல்லாம் அநுபவித்துத் தீர்த்தான் என்ற வாறு. கடல், அளக்கர், வேலை, பௌவம் என நான்கு சொற்களால் நான்கடி களிலும் ஸமுத்திரத்தைக் குறித்த சாதுரியம் காண்க. மன்னவனிடம் தானம் பெற்ற யாசகர்கள் எண்ணிறந்தவர்களென்பதைக் காட்ட அவர்கள் கடலாகக் கூறப்பட்டனர் ; மன்னவன் ஆராய்ச்சி செய்த சாஸ்திரங்களும் அளவிறந்தவை யென்று காட்ட அவையும் கடலாகக் கூறப்பட்டன ; மன்னவனுக்குத் தோற் றொழிந்த பகைவர்களும் கணக்கற்றவர்களென்று காட்ட அவர்களும் கடலாகக் கூறப்பட்டனர் ; * கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலு மைங்கருவிகண்டவின்பங் கள் மன்னவனுல் துய்க்கப்பட்டவை எண்ணிறந்தவை யென்று காட்ட அவையும் கடலாகக் கூறப்பட்டன. இவற்ருல் மன்னவனுடைய அவாப்த ஸமஸ்தகாமத்வம் கூறிற்றுயிற்று. ... ... ... .... ... *

31\. எய்யென வெழுபகை யெங்குமின்மையான்
மொய்பெருந் தினவுறு முழவுத் தோளினன்
வையக முழுவதும் வறியனேம்புமோர்
செய்யெனக் காத்து இனிதரசுசெய்கின்ருன். 12

| | | | |
|---|---|---|---|
| எய் என எழு பகை | 'என் மீது அம்பை எறிவாயாக' என்று வீரவாதம் செய்து கொண்டு எதிரிட்டு வருகின்ற பகைவர்கள் | முழுவு தோளினன் | மத்தளம் போலத் திரண்டிருந்த தோள்களையுடைய தசரதன் |
| எங்கும் இன்மையான் | எவ்விடத்து மில்லாமையினுல் | வையகம் முழுவதும் | பூலோகம் முழுவதையும் |
| மொய் பெரு தினவு உறு | போரைப் பெருமல் தினவு மிகுந்த | வறியன் ஓம்பும் ஓர் செய் என காத்து | ஏழையான வொருவன் காப்பாற்றுகின்ற சிறு கழனியைப்போலப் பாதுகாத்து |
| | | இனிது அரசு செய்கின்றுன் | இனிமையாக அரசுபுரியாநின்றுன். |

* * *—முன்னிரண்டடிகளால் தசரத மன்னவன் * ஒரு நாயகமாயோட வுலகுட னுண்டவனென்பது காட்டப்பட்டது. பகைவர்களென்கிற பெயரே யில்லாதபடி வென்று விளங்கியதனுல் எப்போதும் தோளில் தினவு மிகப் பெற்றே யிருப்பனென்றது. இத்தகைய தனி வீரனுன தயரதன் பூலோகம் முழுவதையும் ஆண்டதற்கு "வறிய னேம்புமோர் செய்யென" என்று உவமை கூறினதன் கருத்து—தரித்திரனுன வொருவன் தனக்குள்ள சிறு வயலை எங்ஙனம் மிக்கவூக்கத் தோடு யாதொரு தீங்கும் நேராதபடி காப்பாற்றுவனே அங்ஙனம் காப்பாற்றின னென்றவாறு. உலகம் முழுவதையும் காக்குமிடத்து அநாயாஸமாகக் காத்தன னென்பதும் இதில் தொனிக்கும். ... ... ... ... *

அரசியற் படலம் முற்றிற்று.



## 5. திருவவதாரப்படலம்

இப்படலத்திற் கூறிய கதையின் சுருக்கம் வருமாறு :—

தயரதமன்னவன் ஒருநாள் தன் குல குருவான வஸிஷ்ட முனிவரைத் தொழுது 'அறுபதினுயிரமாண்டு யாதொரு குறைவுமின்றி யான் அரசாண்டும் என் காலத்திற்குப்பிறகு இந்த ராஜ்யத்தை யாளுதற்குச் சந்ததியில்லை யென்ற ஒரு குறைமாத்திரம் என் மனத்தை மிக வருத்துகின்றது ; முனிவர்களும் அந்தணர் களும் இதுகாறும் போலவே இனிமேலும் குறையற வாழவேண்டுமாயின் எனக் கொரு புதல்வனிருக்க வேண்டியது அவசியமல்லவா ? என்று விண்ணப்பஞ் செய்தனன். அதுகேட்ட வசிட்ட முனிவன் அவ்வரசனது குறையைத் தீர்ப்பதற்கு என்ன செய்யலாமென்று ஆலோசிக்கையில் ; தேவர்கட்குத் திருமால் அபயமளித்த விருத்தாந்தம் நினைவிற்கு வரவே அதனைச் சொல்லத் தொடங்கினன். மன்ன வனே ; கீழே நடந்திருப்பதொரு செய்தியைச் சொல்லுகிறேன் கேளாய் ; இந்திரன் முதலிய தேவர்கள் அரக்கர்களால் மிகவும் வருந்திச் சிவபெருமானை யடைந்து தங்கள் கஷ்டங்களை முறையிட அக்கடவுள் அரக்கரை யழிக்க எம்மாலாகாதென்று சொல்லி அத்தேவர்களுடனே பிரமனுள்ள விடத்தே சென்று தேவர்கட்கு அரக் கர்களால் நேர்ந்துள்ள துன்பத்தைக் கூறினன் ; அரக்கர் தலைவனை இராவணனை யொழிப்பது நம்மால் முடியாத காரியம் ; திருமால் தான் தனது கருணையினுல் அவனைத் தொலைக்கவேண்டும் என்பதுதான் அங்கு முடிவு செய்யப் பட்டது. உடனே அவர்கள் திருமாலை மனத்தினுல் சிந்திக்க, அப்பெருமான் திரு மகளோடு கருடன் மீதேறி வந்து அத்தேவர்கட்கு முன்னே காட்சி தந்தருளினன். இப்படி, நினைத்த மாத்திரத்திலேயே வந்து சேவை தந்தருளியதனுல் அப்பெரு மானுல் தமது குறை விரைவில் முடியுமென்று பெருமகிழ்ச்சிகொண்ட தேவர்கள் ஆடியும் பாடியும் நிற்க, திருமால் கருடனின்று இறங்கி அங்குள்ளதொரு மண்ட பத்தே இடப்பட்ட செம்பொற் சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்க, எல்லாத் தேவர் களும் அத்திருமாலை வணங்கி அரக்கரால் தமக்கு நேர்ந்துள்ள கொடுமையைக் கூறத் தொடங்கி 'விண்ணவரும் மண்ணவருமியற்றும் நற்கருமங்களுக்கெல்லாம் அரக்கர் மிகுந்த இடையூறு இழைக்கின்ருராதலால் தேவரீர் அவர்களைத் தொலைத் திடாவிடின் எங்களாற் பிழைத்திருக்க முடியாது' என்று முறையிட்டனர். அவர் களுள் பரமசிவன், "செங்கண்மாலே ! நாங்கள் அறியாது அரக்கர்கட்கு வரங் கொடுத்ததனுல் உலகங்கட்கெல்லாம் அளவற்ற தீம்பு உண்டாயிற்று ; இவ்வுலகங் கட்கெல்லாம் தேவரீரே தலைவராதலால் அதனைத் தீர்த்து உலகத்தைக் காக்க வேண்டுவது உமது கடமையேயாகும் ; இனிச்சிறிதுபோது தாமதித்திருந்தாலும் அவர்களால் உலகமெல்லாம் அழிந்திடும்" என்று விசேஷித்துக் கூறினன். அவை கேட்ட திருமால் அவர்களை நோக்கி 'இனி நீங்கள் சிறிதும் வருந்த வேண்டா ; உங்கள் துன்பங்களைத் தீர்த்து இன்ப மளிப்பேன் யான் ; அச்சம் நீங்கி வாழ்மின் ; எனது சங்கு சக்கரங்களும் திருவனந்தாழ்வானும் எனக்குத் தம்பிகளாய் அமைய, நான் அயோத்தியில் தசரத சக்கரவர்த்திக்குப் புதல்வனுய்ப் பிறந்து அரக்கரது வரத்தையும் வாழ்வையும் ஒழிப்பேன் ; நீங்கள் பூமியில் வானரங் களாகப் பிறந்திடுமின்' என்று சோதிவாய் திறந்து பணித்தனன். அதுகேட்டுத் தேவர்கள் மிக மகிழ்ச்சிகொள்ள, திருமால் கருடன் மீதேறி யெழுந்தருளியாயிற்று. பிறகு நான்முகக்கடவுள் தேவர்களை நோக்கி "கரடிகளிற் சிறந்துள்ள ஜாம்ப வான் முன்னமே எனது அமிசமாகத் தோன்றியுள்ளான் ; திருமால் நியமித்த படியே நீங்களெல்லீரும் போய் வானர வீரர்களாகப் பிறந்திடுமின்" என்று கூறினன். பிறகு இந்திரன் சூரியன் அக்னி என்பவர்கள் வாலியையும் சுக்ரீவனை யும் அங்கதனையும் தனது அமிசமாகக் கூறினர். வாயுவும் ருத்ரனும் அனுமானைத்

தமது அமிசமாகக் கூறினர். மற்றைத் தேவர்கள் நாங்களும் குரங்குகளாகப் பிறக்க மனவுறுதி கொண்டோமென்று சொல்லிப் போயினர், இது நிற்க.

ஸ்ரீமந்நாராயணமூர்த்தி அரக்கர்களை யழித்தற் பொருட்டுத் தசரத மன்னவனுக்குப் புதல்வனுகப் பிறக்கப்போவதை மனத்திலெண்ணிய வசிஷ்ட முனிவன், யாகஞ் செய்தால் அந்த வியாஜத்தினுல் திருமால் திருவவதரிப்பனென்ற வுறுதியினுல், 'மன்னவா! நீ ஏழேழ் பூதலங்காக்கவல்ல புதல்வரைப் பெறுவிக்கும் வேள்வி யொன்றைச் செய்து முடித்தல் நலம்' என்று அரசனை நோக்கிக் கூறினன். மன்னவன் அதுகேட்டு மகிழ்ந்து யாகத்திற்குத் தான் செய்யவேண்டுவதை வினவி நிற்க, அதற்கு முனிவன் கூறுகின்ருன்—'காசியபனுக்குப் புதல்வன், விபண்டகனென்னும் முனிவனுளன், அவனது புத்திரன் ருசிய சிருங்கன் (கலைக் கோட்டு முனிவன்) என்று பேர்பெற்றவன். அவன் மனிதர்களையே பாராமல் தபோவனத்திலேயே தன் தந்தைக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்ததனுல் நாடு நகரங்களில் வாழ்கின்ற மானிடரை விலங்குகளாக நினைப்பவன், ஸகல சாஸ்திரங்களிலும் வல்லவன், மஹா தபஸ்வி, பிரம ருத்திரரும் புகழும் பொறுமை வாய்ந்தவன்; அந்த முனிவன் வந்து யாகத்தை முற்றுவித்தால் நீ கருதியபடி புத்திரர் பிறப்பர்' என்றனர். அதற்காக நான் செய்ய வேண்டுவதைக் கூறவேணுமென்று தசரதனுல் வேண்டப்பட்ட முனிவன் விரிவாகச் சொல்லத் தொடங்கினன்:

—ஸ்வாயம்புவ மநுவின் மகன் உத்தானபாதன்; அவன் மகன் ரோமபாதனென்பான். அவன் அங்க தேசத்திற்கு அரசனுக இருந்தான். அந்நாட்டில் வெகுகாலம் மழையின்மையால் கொடிய பஞ்சத்துயர் மிக்க வளவில் அம்மன்னவன் முனிவர்களை வரவழைத்துத் தான தருமங்கள் செய்த பின்னரும் மழை பொழியாதாக, பிறகு பெரியோர் பலரை விசாரித்ததில், ரிசிய சிருங்க முனிவன் இந்நாட்டில்வந்தால் மழைபெய்யும் என்று அவர்களால் தெரிந்துகொண்டு அம்முனிவனைத் தனது நாட்டிற்கு அழைத்து வருவது எங்ஙனம்? என்று உரோமபாதன் சிந்திக்க, விலைமகளிர் சிலர் தாம்சென்று அழைத்து வருவதாகக் கூற, அப்படியே, அவர்கட்கு அனுமதி தந்தனனுக, சென்ற அவ்வேசையர் ருசிய சிருங்கனது ஆச்ரமத்திற்கு ஒரு யோசனை தூரத்தில் முனிவர் வேடத்துடன் ஒரு பர்ணசாலையை யமைத்துக் கொண்டு அதில் தங்கியிருந்து அக்கலைக்கோட்டு முனிவரது தந்தையான விபண்டக முனிவன் வெளியிற் சென்றிருந்த சமயம் நோக்கி அக்கலைக்கோட்டு முனிவரை யணுகினர். அவர் தந்த உபசாரங்களைப் பெற்றுத் தம்மிடமே திரும்பினர். மீண்டும் சிலதினம் கழிந்தபிறகு கலைக்கோட்டு முனிவனுக்குத் தங்களிடம் விச்வாஸம் மிகும்பொருட்டுப் பலவகைக்கனிகளைக் கொணர்ந்து கொடுத்தனர் அவ்விலைமாதர்கள். இங்ஙனம் பலநாட்கள் கடந்தபின் ஒருநாள் அம்முனிவரை நோக்கி தேவரீரும் எங்கள் ஆச்ரமத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று சொல்லி வணங்கி வேண்ட, அதற்கு உடன்பட்டு அவர்களோடு சென்ருர் கலைக்கோட்டு முனிவர். அவ்விலைமகளிர் தமது ஆச்சிரமம் மிக அருகிலுள்ளதாகச் சொல்லிக்கொண்டு அம்முனிவருடன் அங்கதேசத்து வழியிற் சென்ருர்களாக, அங்கு இம்முனிவரது பாதம் பட்ட மாத்திரத்திலே சளசளவென்று மழைபொழிந்து நீர்நிலைகள் யாவும் நிறைந்து ஆறுகளும் பெருகியோடின. திடீரென்று இங்ஙனமான விசேஷத்தைக்கண்ட ரோமபாதன், கலைக்கோட்டு முனிவன் வந்தான் போலுமென்று ஆலோசித்து மகிழ்ந்து சேனைகளுடன் அம்முனிவரை எதிர்கொள்ளச் சென்று வணங்கி, விலைமகளிரை நோக்கி 'நீங்கள் என்னுடைய துன்பத்தை உங்கள் உபாயத்தால் தீர்த்து விட்டீர்களென்று சொல்லிப் புகழ்ந்தனன். இப்படி நம்மை வஞ்சனையாகவா இவர்கள் இங்கு அழைத்துக்கொண்டு வந்தார்கள்! என்று சினம்பொங்கி நின்ற முனிவன், மன்னவன் உண்மை



யுரைத்துத் தெரிவிக்கத் தெளிந்து, தேரின் மீதேறிக்கொண்டு ரோமபாத மன்னவனது நகரத்திற்குச் சென்றனன். அங்குச்சென்று சிங்காதனத் தமர்ந்து மன்னவனுடைய சாந்தையென்னும் புதல்வியை மணம் புணர்ந்துகொண்டு அவ்விடத்தே இனிதுறைகின்ருன்; அவனை இங்கு அழைத்துவருதல் வேண்டும் என்று கூறி முடித்தனன் வசிட்டமுனிவன். பிறகு, நானே சென்று அம்முனிவனை யீண்டு அழைத்து வருவேனென்று சொல்லிப் பரிவாரங்களுடன் அங்கநாட்டை நோக்கிப் புறப்பட்ட தசரதன் ரோமபாத மன்னவனுல் நன்கு உபசரிக்கப் பெற்றுத் தான் வந்த காரியத்தைச் சொல்ல, அம்மன்னவன் 'நீர் அயோத்திசென்று சேரும்; நான் முனிவனை அழைத்துக்கொண்டுவருகிறேன்' என்று சொல்லி மரியாதைகளுடன் தயரதனை அயோத்திக்கு அனுப்பிவிட்டு, பிறகு, முனிவன்திருவடிகளிலே விழுந்து வணங்கித் தசரத சக்கரவர்த்தியின் மனோரதத்தை நிறைவேற்றி யருளவேணுமென்று வேண்டி, அதற்கிசைந்த அவருடன் தானும் அயோத்திசேர, அங்கு அனைவரும் பரமானந்த மெய்தினர். பிறகு கலைக்கோட்டு முனிவன் தன்னை வரவழைத்த காரணத்தைத் தெரிந்துகொண்டு வேள்வி செய்விக்கச் சன்னத்தனயினன்.

வேள்விக்கு வேண்டிய யாவும் சித்தமாக, தசரதன் யாக தீக்ஷை பெற்றனன். ஒருவருஷகாலம் அசுவமேதயாகம் நடந்தது. ருச்யசிருங்க முனிவன் அந்த யாக குண்டத்தில் புத்திர காமேஷ்டி யாகஞ் செய்தனன். அப்போது செம்பட்ட மயிரையும் செந்நிறக் கண்களையுமுடைய பூதமொன்று பொன்தட்டின் மீது அமிர்த பிண்டத்தைத் தாங்கிக்கொண்டு ஹோமாக்கியில் நின்றும் விரைந்தெழுந்து வந்து அந்த அமுதத் தட்டைத் தரையிலே வைத்துவிட்டு வந்த வழியே மீள, ருச்யசிருங்கன் முறைப்படி அந்தச் சுதையைப் பட்ட மஹிஷியர்க்குத் தரும்படி தசரதனிடம் கூறினுன். அக்கட்டளையின்படியே மன்னவன் கௌஸலைக்கும், கைகேயிக்கும், சுமித்திரைக்கும் முறையே சுதையை யளித்து, பின்னும் எஞ்சியதைச் சுமித்திரைக்கு அளித்தனன். முனிவன் யாக ஹோமம் முடித்ததும் யஜமானனுயிருந்த தசரதன் யாகசாலையை விட்டுப் புறப்பட்டுப் பூர்ணஹுதிக்கு அங்கமாகப் பூரி கொடுத்தற்பொருட்டு ஓலக்கமண்டபத்தை யடைந்தனன். அந்தணர்க்குத் தக்ஷிணை கொடுத்து அவபிரதஸ்நாநஞ் செய்து ராஜ ஸபையை யடைந்து வஸிஷ்டரையும் ரிச்யச்ருங்க முனிவரையும் வணங்க, அவரவர்கள் மன்னவனை ஆசீர்வதித்துத் தம்தம் இருப்பிடமேகினர். பிறகு சக்கரவர்த்தியின் தேவியர் மூவரும் கருத்தரித்து நாளடைவில் ப்ரஸவித்தனர். கௌஸல்யாதேவி புனர் பூசத்தில் கர்க்கட லக்னத்தில் ஸகல லோகநாதனை திருமாலைப் புதல்வனுகப் பெற்றனள். கைகேயி பூசத்தில் மீன லக்கினத்தில் ஒரு புதல்வனைப் பெற்றனள். சுமித்திரை ஆயில்ய நக்ஷத்திரத்தில் கர்க்கட லக்னத்தில் ஒரு புதல்வனையும், மகா நக்ஷத்திரத்தில் சிங்கராசியில் மீண்டும் ஒரு புதல்வனையும் பெற்றனள். உடனே அவர்களது தோழிமார்கள் அரசனிடம் விரைந்து சென்று புத்திரர் பிறந்த ஸந்தோஷ ஸமாசாரத்தைச் சொல்லி ஆனந்தக் கூத்தாடி நிற்க, அரசனும் உவந்து சோதிடம் வல்லாரை வருவிக்க, வந்த அவர்கள்பிறந்த நாள் தத்கால கிரகம் முதலியவற்றை யாராய்ந்து 'உலகுகட்கு நேர்ந்துள்ள வருத்தம் யாவும் இப்புதல்வர்களால் நீங்கும் என்று பாராட்டிக் கூறி எல்லாப் புதல்வர்கட்கும் ஜாதக மெழுதித் தந்தனர். தந்தை முறைப்படி ஸரயூ நதியில் தீர்த்தமாடித் தானதருமங்களைச் சிறப்பாகச் செய்தனன். சிறைப்பட்ட அரசரை விடுவிக்குமாறும் அந்தணர்கள் விரதங்களைக் குறைவில்லாமல் நடத்தவும் ஆங்காங்குக் கோவில்களைச் செப்பனிடவும் திருவாராதனை முறைகளைச் சிறப்பிக்கவும் விசேஷமான திருவிழாக்களை நடத்தவும் அந்தணர்கட்கு க்ராம பூமிகள் தானஞ் செய்யவுங் கட்டளையிட்டு, அவரவர்கள் செலுத்த வேண்டிய கப்பங்களை ஏழுவருஷம் தவிர்கவென்றும், பொக்கிஷசாலையைத் திறந்து

விட்டு ஏழைகட்கு ஈந்திடுக வென்றும் பறையறை விக்கத் தெரிவித்தனன். அப்படியே வள்ளுவர் பறையறைந்து செய்தி தெரிவிக்க நகரத்து மாந்தரெல்லாம் மகிழ்ந்தனர்.

பிறகு வசிட்ட முனிவன், புதல்வர் நால்வர்க்கும் முறையே இராமனென்றும் பரதனென்றும் லக்ஷ்மணனென்றும் சத்ருக்னனென்றும் திருநாமம் சாத்தினன். அப்போது அரசன் அளவிறந்த செல்வங்களால் அந்தணர்களை யுகப்பித்தனன். இராமனிடத்திலேயே தயரதன் பேரன்பு பூண்டிருந்தனன். சுக்கில பக்ஷத்துச் சந்திரன் போல் குறையற வளர்ந்து செல்லும் இக்குமாரர்கட்குக் கால காலத்தில் சவுளமும் உபநயனமும் விதிமுறை நடத்தியபின் அவர்கட்கு வசிட்ட முனிவன் பலகலைகளையும் பயில்வித்தனன். ஸ்ரீராம லக்ஷ்மணர்களும், பரத சத்ருக்நர்களும் ஒருவரையொருவர் பிரியாது பேரன்புடையரா யிருந்தனர். இராமபிரான் தனது நற்குண நற்செய்கைகளினால் எல்லாருடைய மனத்தையுங் கவர்ந்து கொண்டு இனிது வாழ்ந்தனன். தசரத சக்கரவர்த்தியோ ஒப்பற்ற ஆனந்தக்கடலில் மூழ்கி வாழ்கின்றான்.

(5. திருவவதாரப்படலத்திலுள்ள விசேடச் செய்யுள்கள்)

32. ஆயவ னொருபகல் அயனையே நிகர் தூயமா முனிவரன் தொழுது தொல்குலத்
தாயருந் தந்தையுந் தவமுமன்பினுன் மேபவான் கடவுளும் பிறிவும் வேறுநீ 1

***—(தசரதமன்னவன் வசிட்ட முனிவனைத் துதிக்கின்றனன்.) அத்தன்மையனான தசரதன் ஒருநாள் நான்முகக் கடவுளை யொத்த வசிட்ட மூனிவனை வணங்கி, தொன்று தொட்டு வருகிற உயர்குலத்திற் பிறந்த தாய்மார்களும் தந்தையரும் தவமும், பக்தியோடு விரும்பியடையப் படுகிற சிறந்த குல தெய்வமும், மற்றும் ஐஹிகா முஷ்மிக ஸாதனங்களும் எல்லாம் எனக்கு நீயே யாவாய் என்றனன். *

33. எங்குலத் தலைவர்கள் இரவிதன்னிலும் தங்குலம் விளங்குறத் தரணி தாங்கினர்
மங்குநரில்லென வரம்பில் வையகம் இங்குனதருளினு லினிதினேம்பினேன். 2

***—வசிட்ட முனிவனே ! எமது குலத் துதித்த முன்னோர்கள் ஸூர்யனைக் காட்டிலும் மிகுதியாகத் தங்கள் குலம் கீர்த்தியால் விளங்கும்படி ஒளி மழுங்கினவர்கள் எவருமில்லை யென்று சொல்லுமாறு இவ்வுலகத்தைப் பாதுகாத்தார்கள்; எல்லையற்ற இந்நிலவுலகத்தை இப்போது அடியேனும் உமது திருவருளினால் குறையறப் பாதுகாத்து வருகின்றேன். .... .... ... ... *

34. அறுபதினுயிர மாண்டு மாண்டுற, உறுபகையொடுக்கி யிவ்வுலகை யோம்பினேன்
பிறிதொரு குறையிலை எற்பின் வையகம், மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ. 3

***—மிக்க பகைவர்களை யடக்கி அறுபதினாயிரம் வருஷகாலம் இவ்வுலகத்தைப் பாதுகாத்தேன்; எனக்குப் பிறகு இவ்வுலகமானது தகுந்த ரக்ஷகரைப் பெறாமல் கலங்கிவிடுமே யென்பதாகிய ஒரு மனக்கவலை மட்டும் எனக்குண்டு; இதைத் தவிர்த்து வேறொரு குறையுமில்லை. ... .... ... *

35. அருந்தவ முனிவரும் அந்தணளரும், வருந்துதலின்றியே வாழ்வின் வைகினர்
இருந்துய ருழக்குவர் எற்பினென்பதோர், அருந்துயர் வருத்துமென் னகத்தையென்றனன். 4

***—மஹாதபஸ்விகளான முனிவர்களும் பிராமணர்களும் இதுகாறும் வருத்தமின்றி நல்ல வாழ்வில் அமர்ந்திருந்தார்கள்; அன்னவர்கள் என் காலத்திற்குப் பிறகு ரக்ஷகரில்லாமல் மிக்க துன்பத்தை யநுபவிப்பார்களே யென்பதான வொரு பெரிய துன்பமே என் மனத்தை வருத்துகின்ற தென்றான். ... *

கிடைக்குமிடம் ;—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம்.

(2) கராலபாடி ராதாகிருஷ்ணய்யர்,
229, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதராஸ்—1.

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்ரிப்பேட்டை, மதராஸ்—2.
(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. Annangaracharyar, L. Kancheepuram.**




80. The Sanskrit College,
Sriperumbudur. (Chingleput Dt.)

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswar Press,
Sannidhi Street, Chinna Kancheepuram.

